# ஏற்றப் பாட்டுகள்

கி. வா. ஜகந்நாதன்







அமுத நிலையம்

நாடோடிப் பாடல்கள், வரிசை—1

# ஏற்றப் பாடல்களும் தொழிற் பாடல்களும்

தொகுத்தவர் :
கி. வா. ஜகந்நாதன்

அமுத நிலையம் லிமிடெட்
46, இராயப்பேட்டை ஹைரோடு,
சென்னை-600 014.

# முன்னுரை

தமிழ் நாட்டில் வழங்கும் நாடோடிப் பாடல்கள் பல. வெவ்வேறு இடங்களில் அந்த அந்த இடத்துக்கேற்ற வகையில் அந்தப் பாடல்கள் வழங்குகின்றன. நாடு முழுவதும் சென்று வழங்குவதனால் இவற்றை நாடோடிப் பாடல்கள், நாட்டுப் பாடல்கள், பாமரர் பாடல்கள் என்று வழங்குவார்கள்.

இந்தப் புத்தகத்தில், எனக்குக் கிடைத்த ஏற்றப் பாடல்களைத் தொகுத்துத் தந்திருக்கிறேன். உழைப்பாளிகளின் பாடல்களும் இத்தொகுதியில் உள்ளன.

நாடோடிப் பாடல்களில் உலக வழக்கில் உள்ள கொச்சைச் சொற்களே மிகுதியாக இருக்கும். இலக்கியப் புலவர்களின் பாடல்களுக்கும் இவற்றுக்கும் பல வேறுபாடுகள் உண்டு இவற்றில் ஓரடியே திருப்பித் திருப்பி வரும்.

ஏற்றமரத்தில் மேலே ஏறி இரண்டு அல்லது மூன்று பேர் மேலும் கீழும் நடந்து பாடுவார்கள். மரத்தின் நுனியில் இணைத்துத் தொங்கும் கோலின் நுனியில் சாலைக் கட்டியிருப்பார்கள். ஏற்றமரம் சாயும்போது கோல் கீழே சென்று சாலில் தண்ணீரை முகக்கும். மறுபடி மேலுள்ளவர்கள் கீழே போகும்போது சால் மேலே வரத் தண்ணீரை இறைப்பவன், "ஒருபதியால் ஒண்ணு, இருபதியால் ரெண்டு" என்று இறைக்கும் சாலின் எண்ணிக்கையைச் சொல்வான்.

"ஏற்றப் பாட்டுக்கு எதிர்ப் பாட்டில்லை; பூசாரி பாட்டுக்குப் பின்பாட்டு இல்லை" என்று ஒரு பழமொழி வழங்குகிறது. இயற்கையாகவே ஏற்றப் பாடல்களை

வழிவழியாகவே பாடி வருகிறார்கள். அவற்றை யார் முதலில் இயற்றினார்கள் என்று தெரியாது. பல இடங்களில் வழங்கும்போது ஒரே பாட்டில் பல அடிகள் கூடியிருக்கும்; சில அடிகள் குறைந்திருக்கும்; சில அடிகளில் பாட பேதம் இருக்கும். அத்தகைய பாட பேதங்களில் சிலவற்றை அடிக்குறிப்பில் கொடுத்திருக்கிறேன்.

இவற்றில் பொருள் தொடர்ச்சியாக இராது. சில அடிகளில் தொடர்ச்சி இருக்கும். எதுகை, மோனை, ஓசை ஆகியனவற்றை இவற்றில் காணலாம் இடையிடையே பல அரிய கருத்துக்கள் வரும். அப்படி வருவனவற்றில் சில வருமாறு :

**ஒருவன்தாண்டா அல்லா, உலக்மெல்லாம் ஆள்வான்.**
**மழைபெய்த வாசலிலே மைந்தனடி காணேனே!**
**எங்கும் பராசக்தி எல்லாம் ஆன ஒத்தி.**
**அன்னங்கள் அழுமோ ஆண் மயிலைத் தேடி ?**
**ஏழைக் கேது காலம் ?**
**எழுதாத ஓலை சுருளாமோ பொண்ணே ?**
**பசுவும் கிழம் ஆனால் பால்குணமும் போமோ ?**
**பாம்பும் கிழம் ஆனால் பல் விஷமும் போமோ ?**
**பார்ப்பான் கிழமானால் பஞ்சாங்கம் பொய்யாமோ ?**
**என்னைக் கிருந்தாலும் இரவல் இந்தக் காயம்.**
**எனக்குத் தெய்வம் நீரே; உமக் கடிமை நானே.**
**இடுவஞ்சனை சூது இரண்டும் உதவாது.**
**அம்பிலே சமர்த்தன் அருச்சுனன் ஒருவன்.**
**ஆறுமுகம் என்றால் தீரும்வினை எல்லாம்.**

ஏழை எளியோரைத் தாழச் சொல்லலாமோ ?
எழுதிப்படி தம்பி, கவனி பாடம் எல்லாம்.

இந்தப் பாடல்களில் பல அடிகள் தொடர்பும் பொருளும் இல்லாமல் இருந்தாலும் பழமையைக் காக்கவேண்டும் என்ற எண்ணத்தினால் அப்படியே வெளியிடுகிறேன்.

நாடோடிப் பாடல்களைப் பற்றிய ஆராய்ச்சியை இப்போது பலர் செய்கிறார்கள். பல நூல்கள் வெளியாகி யுள்ளன. பழங் காலத்தில் 'பாலிகா பூஷணம்' என்ற நூல் ஒன்று உண்டு. அதில் பல நாடோடிப் பாடல்கள் இருந்தன.

பெரும்பாலும் பெண்களே ஏற்றப்பாட்டு அல்லாத பிற பாடல்களைப் பாடுகிறார்கள். ஏற்றப்பாட்டு ஆண்கள் பாடுவது. ஏற்றத்தை இயக்குகிறவர்கள் ஆண்கள் தாமே?

ஏற்றப்பாட்டைப் போலப் பிற நாடோடிப் பாடல் களையும் தொகுத்து வைத்திருக்கிறேன். நாற்பதாண்டுக் காலமாகத் தொகுத்தவை இவை.

இலக்கியப் புலவர்கள் பாட்டிற் காணும் இன்பம் வேறு; நாடோடிப் பாடல்களிற் காணும் இயற்கைச் சுவை வேறு. மனிதனுடைய நற்குணங்களும் தீய குணங் களும் இவற்றில் வரும். ஒரு சாதியை மற்றொரு சாதியினர் இழிவாகச் சொல்வதும் உண்டு. இவை பழம் பாடல்கள் என்று எண்ணி அவர்கள் அந்த இகழ்ச்சியைப் பொருட் படுத்தமாட்டார்கள் என்று எண்ணுகிறேன்.

இப்போதெல்லாம் சினிமா வந்த பிறகு இத்தகைய பாடல்களைப் பாடுவோர் குறைந்துவிட்டனர். இன்னும்

பல ஆண்டுகள் போனால் இவை அடியோடு மறந்து போகும். ஆதலால் இவற்றை இந்தமட்டும் வெளியிட்டு வைக்கலாம் என்று எண்ணினேன்.

பாமரரும் புலவர்களும் இவற்றில் இன்பம் காணலாம். காட்டுப் பூக்களைப் போலவும், மலையருவியைப் போலவும், நாகரிகம் தெரியாமல் இயற்கையோடு ஒன்றி வாழும் வஞ்சகமற்ற மக்களின் பேச்சைப் போலவும், குழந்தைகள் தொடர்பின்றிப் பேசுவதைப் போலவும் உள்ளவை இவை.

இவற்றைப் படித்துச் சுவைகாணும் அன்பர்களுக்கும் இவற்றை அங்கங்கே போன இடங்களில் சொன்னவர் களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

'காந்தமலை', மந்தைவெளி
*10—5—1983*

கி. வா. ஜகந்நாதன்

# உள்ளுறை

# ஏற்றப் பாட்டு

## 1

ஆதி பெரியோனே, ஆண்டவனே, காவல் ;
ஆபத்து வராமல் அடியேனைக் காரும் ;
ரெண்டுடனே வாரீர்; மூணுடனே வாரீர் ;
நாலுடனே வாரீர், அஞ்சுடனே வாரீர்;
ஆறுடனே வாரீர், ஏழுடனே வாரீர்;
எட்டுடனே வாரீர்......

எட்டாத் துலைக்கு வற்றாத கடலோ?
ஓடிவாளன் கண்ணே, ஒருபதியால் ரெண்டு,
ஒருபதியால் ரெண்டு, ஒருபதியால் மூணு,
ஒருபதியால் நாலு, ஒருபதியால் அஞ்சு,
ஒருபதியால் ஆறு, ஒருபதியால் ஏழு,
ஒருபதியால் எட்டு......

ஒருவன்தாண்டா அல்லா; உலகமெல்லாம் ஆள்வோன்.
இருள் தன்னை வீச, இருபதியால் ரெண்டு.
இருபதியால் மூணு, இருபதியால் நாலு,
இருபதியால் அஞ்சு, இருபதியால் ஆறு,
இருபதியால் ஏழு, இருபதியால் எட்டு,

இருந்துபோவும் பொண்ணே, நடந்தகளை திர;
மூணிலம் பதுவோ? முப்பதியால் ரெண்டு;
முப்பதியால் மூணு...... முப்பதியால் ரெண்டு;
முப்பதியால் நாலு...... முப்பதியால் எட்டு;
மூக்குத்தியும் பொட்டும் மேற்கத்தியார் போல.

நல்ல மழைபெய்ய நாற்பதியால் ரெண்டு;
நாற்பதியால் மூணு...... நாற்பதியால் எட்டு.

நாத்துநடு பெண்ணே, கேக்கிருனே உன்னை;
அஞ்சினேண்டா கண்ணே, அம்பதியால் ரெண்டு.
அம்பதியால் மூணு...... அம்பதியால் எட்டு;

ஆத்துவண்டல் ஓடிப் பூத்ததடா நாணல்;
ஆராக்கப் பானே? அறுபதியால் ரெண்டு;
அறுபதியால் மூணு......, அறுபதியால் எட்டு.

அறுபதடிக் கம்பம் ஏறிஆடும் தொம்பன்;
தொம்பன்மகள் ஆட ஏழிலம் பதுவோ?
எழுபதியால் ரெண்டு......எழுபதியால் எட்டு.

ஏழைவச்சான் வாழை; மகளைவெச்சான் காவல்.
எண்ணங்கள் தழைக்க; எண்பதியால் ரெண்டு;
எண்பதியால் மூணு...... எண்பதியால் எட்டு.
எண்பதியால் எட்டு எண்பதடிக் கம்பம்,
எட்டிப் போகும் பொண்ணே, மட்டில் லாத நாமே
தோளணைய* வாரோம்; தொண்ணூறியால் ரெண்டு,
தொண்ணூறியால் மூணு...... எட்டு,
தோப்படிச்ச மாங்காய் காப்பணமா நூறு;
வந்துதப்பா நூறு, வண்ணத்துலே மேலே;
சென்றுதப்பா நேரம்; செல்வநதி யாலே,
இன்னும்ஒரு நூறு இறைக்கவல்ல வேணும்?
தொண்ணூறியால் ரெண்டு...... தொண்ணூறியால் எட்டு.

தோகைமலே மேலே தொடர்ந்துவாடி பொண்ணே;
எண்ணங்கள் தழைக்க, எண்பதியால் எட்டு,
எண்பதியால் ஏழு...... எண்பதியால் பத்து.

என்னமதி யாலே சின்னவயசுப் பொண்ணே,
கன்னிஆச்சே நீயும்; ஏழிலம் பதுவோ?
எழுபதியால் எட்டு...... எழுபதியால் பத்து.

எங்கிருந்து வந்தே, ஏழைமதி யாலே?
ஆறும்தண்மை விச அறுபதியால் எட்டு.
அறுபதியால் ஏழு, அறுபதியால் ரெண்டு.

---

(பா-ம்.) * தோழனைய.

அன்னநடைப் பொண்ணே, அழகுசித்ர மயிலே,
அஞ்சாச்சே யானே; அம்பதியால் எட்டு;
அம்பதியால் ஏழு......அம்பதியால் ரெண்டு.

அம்பாரம்போட் டானே, தென்பழனி நெல்லை.
நாலாச்சே பானே, நாற்பதியால் எட்டு;
நாற்பதியால் ஏழு...... நாற்பதியால் ரெண்டு.

[நல்லதொரு பட்டணம்] நாகப் பட்டணம்
வந்திறங்கும் கப்பல்; கப்பல்சரக் கென்ன?
மஞ்சள்ஒரு தூக்கு, இஞ்சிஒரு தூக்கு,
மூணிலம் பதுவோ? முப்பதியால் எட்டு;
முப்பதியால் ஏழு......, முப்பதியால் ரெண்டு;
முன்னேவார பொண்ணே? என்னஎன்ன சொன்னுள்?
ஈரந்தண்மை* வீச இருபதியால் எட்டு;
இருபதியால் ஏழு...... இருபதியால் ரெண்டு.

இருப்புலக்கை த்தூ ணு, துலுக்கப்பள்ளி வாசல்.
ஓடிமடை மாற ஒருபதியால் எட்டு;
ஒருபதியால் ஏழு...... ஒருபதியால் ரெண்டு;
ஒருவன் தாண்டா அல்லா, உலக மெல்லாம் ஆள்வான்.
எட்டாச்சா பானே? எட்டுடனே வாரோம்.

2

ஆதிபெரி யோனே, ஆபத்து வராமே
மூ ணு வரிமூ ணு...... எட்டுவரி எட்டு.
எட்டியம்மா தாயே, ஓடிவா தாயே,
ஒருபதியால் ரெண்டு...... ஒருபதியால் எட்டு,

ஓடிமுத்தி தேங்க ஓடைச்சார்புள்ளி பார்க்க;
இருபதியால் ரெண்டு...... இருபதியால் எட்டு.

---

(பா-ம்.) *தன்மை, ஈருந்தன்மை.

இருளப்பள்ளி வாசல் பவளக்கொடித் தூணு;
மூணுமுப்பது தானு? முப்பதியால் ரெண்டு.
முப்பதியால் மூணு...... முப்பதியால் எட்டு.

மூத்தவனும் அண்ணு, ஏத்தமுறை நானே;
நல்லமழை பெய்ய நாற்பதியால் ரெண்டு;
நாற்பதியால் மூணு...... நாற்பதியால் எட்டு.
[நான்கு முதல் ஏழுவரை இப்படியே வரும்.]

நாகூரை வேண்டிப் போனஜனம் கோடி;
அஞ்சுஅம்ப தானுல் ஐம்பதியால் ரெண்டு;
ஐம்பதியால் மூணு...... ஐம்பதியால் எட்டு.

அம்புகள் பறக்க ஆனைகள்போ ராட,
ஆனைவந்து லாவ அறுபதியால் ரெண்டு;
அறுபதியால் மூணு... அறுபதியால் எட்டு.
ஆறுவெட்டப் போறேன்; சோறு கட்டித் தாடி;
சோத்துக் கண்ணே, மாத்தச் சொத்தைமாங்காய்க்
கொட்டை,
ஏழுஇருப தானுல் எழுபதியால் ரெண்டு;
எழுபதியால் மூணு...... எழுபதியால் எட்டு.
நாணுங்கொடி கட்டிப் போகுதடா கப்பல்;
எண்ணிஎன்ப தானுல் எண்பதியால் ரெண்டு;
எண்பதியால் ரெண்டு...... எண்பதியால் எட்டு;

தோழனுரே, வாரும்; தொண்ணூறியால் ரெண்டு;
தொம்பச்சி மகளே, ஒன்புருஷன் எங்கே?
சந்தைக்குப் போனேன்; காயிதமும் வல்லே;
சென்றுபோச்சு நூறு, சேர்ந்தமடை பாய

## 3

ஏழைஒரு பாப்பான் வாழைவச்சான் தோட்டம்;
வாழைவச்ச தோட்டத்துக்கு மகனைவச்சான் காவல்.
ஏத்தக்கார அண்ணு, என்னங்காணும் சண்டை?
சண்டைஒண்ணும் இல்லே; சால்உடைஞ்ச சண்டை;

சாலுக்காரன் வாருன்; சாயப்போடி மூளி;
மூளியின்னு சொன்னுல் முன்விழுந்து சாவேன்;
நாளியின்னு சொன்னுல் நடுவிழுந்து சாவேன்.
மூளிகட்டும் கச்சு முப்பது முழமோ?
முப்பது முழமோ? முழத்துக்கொரு பணமோ?
நாளிகட்டும் கச்சு நாற்பது முழமோ?
முழத்துக் கொருபணம், முழுக்கத்தரேன் நானே;
வாடா, போடா, சண்டை, வந்ததடி சாயோ.

1. ஏழண்ணன்எங்களண்ணன்-எழுத்தாணிக்கூரண்ணன்
குருத்தோலை வாசிப்பான்.

2. ஏழைக்கண் ணுட்டி-தூதுவெள் ளாட்டி
துலுக்கன்பொண் டாட்டி.

3. ஏழம்பூ தாழம்பூ-ஏரிக்கரை நித்திப்பூ,
காசுக்கு ரெண்டு பூ,

4. ஏழைப் பொண்ணே சீதே, என்னகறி சமைச்சே?
முள்இல்லாத நல்ல முருங்கைக்காய்
கிள்ளிப்போட்டுச் சமைச்சேன்.

1. தட்டு ஒண் ணு, தாம்பாளம் ரெண்டு
முத்து மூ ணு, முத்துச்சரம் நாலு.

2. மாருக்கும் தோளுக்கும் மஞ்சள் சரட்டுக்கும்
பாவடைக் காலுக்கும் பதினறு கொப்புக்கும்
என்னைப்பெத்த ஆயாளுக்குப் பொன்னுலே சதங்கை

3. புதையெல்லாம் பொம்பரம், செட்டி சிதம்பரம்
கொக்கு கோலாட்டம்- குருவி திண்டாட்டம்.

## 4

ஏன்அழறே பொண்ணே ?   ஏன்அழறே பொண்ணே ?
ஏன்அழறே பொண்ணே, நீ மான்அழுதாப் போலே ?

மானழுதாப் போலே;—அடிஉன்னே—மாமன் அடிச்சானே?
மாமனடிக் கல்லே; ஒரு மனிதா தீண்ட வில்லே;
(அடியே) புருசன் அடிச்சானே, ஒரு பெரப்பங்கழியாலே?
புருசன் அடிக் கல்லே—ஒரு—பூதர் தீண்டவில்லே :
கொழுந்தன் அடிச்சானே, உன்னைக் கோல்தடியினுலே?
கொழுந்தனடிக் கல்லே; ஒருவரும்தீண்ட வில்லே;
(நான்) வட்டியிலே போட்டசாதம் வாரித்தின்ன மைந்தன்
இல்லே;
கிண்ணியிலே போட்டசாதம் (சுவாமி) கிறித் தின்னப்
புள்ளேஇல்லே;
நான், தண்ணிக்குப் போகையிலே (சுவாமி) தடம்மறிக்கப்
புள்ளே இல்லே;
ஊருக்குப் போகையிலே (சுவாமி) உடன்வரப்
புள்ளேயில்லே;
இந்த, அங்காடிக் கூடையை அழைச்சுவர மைந்தனில்லே;
வெங்காயக் கூடையை (சுவாமி) விலேமதிக்க மைந்தன்
இல்லே;
இந்த, மழைபெய்த வாசலிலே மைந்தனடி காணேனே!
மைந்தனடி காணுமே—நான்—மறுகி அழுகிறேனே!

5

எட்டிப்பறி பூவை, விட்டுவிடு அரும்பை;
தாவிப்பறி பூவை, தள்ளிவிடு அரும்பை;
ஓடிப்பறி பூவை, ஒதுக்கிவிடு அரும்பை;
தள்ளிவிட்ட அரும்பு தானுய்மல ராதோ?
ஒதுக்கிவிட்ட அரும்பு உடனேமல ராதோ?

பூவைப்பறி யேனோ, புள்ளேயார்க்குச்சாத்த?
காயைப்பறி யேனோ, கந்தருக்குச்சாத்த?
மொக்கைப்பறி யேனோ, விக்னருக்குச்சாத்த?
உன்னைத்தொழுதேன் ராமா, ஒருபதியால் ஒண்ணு.
உலகத்தாயி மாரி, சதுரக்கூடைக்காரி,
தாழனூராள் மாரி, தங்கக்கூடைக் காரி,

எங்கும்பரா சக்தி, எல்லாம்ஆன ஒத்தி,
எல்லாம்ஆன ஒத்தி [அவள் ஈசுவரி உமையே];
ஆதிபரா சக்தி, அங்காளம்மாள் தேவி,
நெத்திப்பச்சைக் காரி, நெடுங்குண்ணத்து ஆயி,
பொன்னுக்கூடைக் காரி (அவள்) புறப்பட்டாளே மாரி;
தங்கப்பொட்டுக் காரி (அவள்) தனித்துவந்தாள் மாரி,
ஈசுவரி உமையே, (என்னை) ஈடேறக்கண் பாரும்;
இருபதியால் ஒண்ணு.

இடியைப் போலப் பாணம் (அவர்) விடுவார்ரகு ராமர்;
காற்றைப் போலப் பாணப் (அவர்) கணைகளைத்
தொடுப்பார்;
மழையைப்போலப் பாணம் (அவர்) வரஅளிப்பார் சுவாமி;
பொன்னைப்போலப் பாணம் (அவர்) பூட்டினரே தேவர்;
ஒருவர்கண் ஒளிவு (ஸ்வாமி) உலகம்பதி னாலும்;
சீதைகண் ஒளிவு அந்தச் சீமைபதி னாலும்;
முருகர்முன் நடக்க, முப்பதியால் ஒண்ணு,
ம்ருகண்டரைப் போலத் தவம்பண்ணினவர் இல்லை;

ம்ருகண்ட ரிஷிக்கு (அவர்) முன்னோர்இட்ட சாபம்;
பிள்ளைஇல்லை என்று பெருந்தவங்கள் செய்தார்;
மைந்தன்இல்லை என்று மாளாத்தவம் செய்தார்;
ம்ருகண்ட ரிஷிக்கு மார்க்கண்டர் பிறந்தார்;
மார்க்கண்ட ரிஷிக்கு வயசுபதி னாறு :
வரமளித்தார் ஸ்வாமி, என்றும்பதி னாறாய் :
ஈரெட்டு வயசாய் ஈசுவரரும் தந்தார்;
மார்க்கண்டனும் அப்போ ஆத்துமணல் சேர்த்து
ஹரனைப்பூஜை செய்து ஈசுவரனைப் பார்த்தான்.
மார்க்கண்டனைக் கொல்ல வாரான்எமராஜன்;
காலதூதர் வந்து கட்டளைப் படியே
கடுங்கோபம் ஆனார்; கடுகடுத்து நின்றார்.
ஈசுவரரும் பார்த்து ஏமனை உதைத்தார்;
நாராயணா ராமா, நாற்பதியால் ஒண்ணு.

நாணல் மேட்டைக் கொத்தி நந்தவனம் வச்சார்;
புத்துமேட்டைக் கொத்திப் பூஞ்செடியை வச்சார்;
கொல்லேமேட்டைக் கொத்திக் குடமல்லிகை வைத்தார்;
மோரவெளி கொத்தி முல்லேச்செடி வச்சார்;

முல்லேபறி பொண்ணே, முன்மடியைக் கோலி;
தாவிப்பறி பொண்ணே, தளரமடி கோலி;
முல்லேயும் சிறிசு; முன்மடியும் பொத்தல்;
மல்லிகை பெரிசு, மார்மடியும் பொத்தல்;

நந்தவனம் பார்க்கக் கந்தர்இதோ வாரார்;
பூஞ்செடியைப் பார்க்கப் புண்ணியரும் வாரார்;
வெள்ளானேமேல் ஏறி வேலர்கூட வாரார்;
பொற்கரகம் தண்ணிர் பூவுங்கொண்டு வாரார்;
கற்பக விருட்சம் கையில்தாங்கிக் கொண்டார்;
ஊணினுர் பிரம்பை, உள்ளங்கால் சிலம்பை;
பாதச்சிலம் பாடப் பயணமானுர் சுவாமி.
ஐவர்பட்டம் ஆள, ஐம்பதியால் ஒண் ணு,

அண்ணுஉன் ஞலே பண்ணினேும்வன வாசம்;
பன்னிரண்டு வருஷம் பாரவன வாசம்;
பதின்மூணும் வருஷம் விராடபுரம் சேர்ந்தார்;
விராடராஜ ரண்டை வேஷங்களாய்ப் புகுந்தார்;
ஓங்குகுணக் கர்ணன் (பல) யோசனேகள் சொன்னுன்;
விராடராஜன் மாட்டை மடக்கிவரச் சொன்னுன்.
ஐவரில் ஒருவன் அர்ஜுனன் வருவான்;
ஆங்காரம் படைப்பான்; ஆர்படைக்கும் தோலான்;
பட்டாக்கத்தி மின்னப் படைகளெல்லாம் வெல்ல
மாட்டையுந் திருப்பி மன்னர்களே ஜயித்தான்;
கன்றையும் திருப்பிக் கர்ணன்தோற் ருேடினுன்;
இந்தமல்ல ரோடே ஈடுசெய்ய மாட்டோம்;
இந்தமல்ல ரோடே போருக்கஞ்ச மாட்டோம்;
வந்தமல்ல ரோடே வாதுக் கஞ்ச மாட்டோம்;
ஹரிஹரிகோ விந்தா, அறுபதியால் ஒண் ணு.

அன்னையாக மலடி அம்மாசைக்கு நடந்தாள்;
சேனநாள் மலடி திருவள்ளூர் நடந்தாள்;
அம்மாவாசை நடந்து அதிகபலன் பெற்ருள்;
அதிகபலன் பெற்ருள்: ஆண்புள்ளையைப் பெற்ருள்:
வேங்கடேசா என்று விளங்கும்தலை வாசல்.
ஆதியிலே னென்று ஆலிக்குமோ செல்வம்?
ஏழைவடி வேலா, ஈடேறக்கண் பாரும்;

ஏதுக்கடி போறே (அந்த) வேழக்காரன் தங்கை?
முத்தல்முறம் கூடை மூணும்கட்டப் போறேன்;
நானும்கூட வாரேன், நாமப்பொட்டி கொள்ள;
ஒக்கத்துணை வாரேன், ஓலைப்பொட்டி கொள்ள;
தங்கிமெள்ளப் போலாம் தாழப்பொட்டி கொள்ள;
பொறுத்துமெள்ளப் போலாம் புஷ்பத்தொட்டி கொள்ள;
புஷ்பங்களைத் தேடிப் பூஜைக்கு வாரேன்;
இருந்துமெள்ளப் போனுள் ஈசன்பொட்டி கொள்ள;
ஈசுவரரும் பார்த்து எங்கே இடம் என்ருர்.

பாறையும் சுனையும் பாங்குள்ள நதியும்
தண்ணியும் தடமும் தாமரைப்பூச் செண்டும்;
தாமரைப்பூச் செண்டு தாதியர்க் கழகு;
எங்கள்ஹரி தேவா, எண்பதியால் ஒண்ணு.

எங்கள்புரம் எல்லாம் தங்கமழை பெய்யும்;
வெங்கபுரம் எல்லாம் வெடியநிலாக் காயும்;
தோழிபுரம் எல்லாம் சோதிநிலாக் காயும்;
கன்னிபுரம் எல்லாம் காலமழை பெய்யும்;
மின்னலும் இடியும் வேகமாய்ச் சொரியும்;
கானலும் மழையும் கரக்குமந்த வானம்;
ஊசிபோல மின்னல், உறியைப் போலக் காலு;
மாசிபோல மின்னல் மழையிறங்கப் பெய்யும்;
தொழுதேன்பக வானே, தோராமலைக் காளி,
வாதாடினுள் கூட; தொண்ணூருலே ஒண்ணு.

சொல்லும்சக தேவா (நான்) வெல்லும்படை போக.
சாஸ்திரப் படியே முன்னே ரதம்போனுல்

தருமரும் கெலிப்பார்; தரணிபுரம் ஆள்வார்;
பாவி துரியோதனன் பண்ணினசூதி னாலே;
பதினெட்டுநாள் சண்டை பாரதம் முடிவு;
துரோபதை கெலித்துக் கூந்தலை முடித்துப்
பந்தயம் கெலித்து (அவள்) பட்டணத்தானை வென்றாள்;
மாயவன் பகவான் மன்னருடை ஒண்ணு.

பிள்ளையாரே வாரீர், நாலுடனே வாரீர்;
நாஅலங் காரி, கோலியனூர் மாரி;
நாயகனை வேண்டி நான்புடிச்சேன் சாலு;
நாவண்டைநா லேற்றம் நாயகிபூந் தோட்டம்
நாவினாலே சொன்னால் பாதகமோ, பொண்ணே!
எட்டுடனே வாரீர்; எட்டாத உயரம்;
நட்டாடுறான் கம்பம்; எட்டுத்தண்ட மாலை,
ஒப்புக்கொண்டார் வேலை......
எட்டிஅடிச் சானே, சட்டிக்கயிற் றாலே;
எப்போதும் போல என்னைக் காத்தருள வேணும்;
ஒருபதியால் நாலு; ஒப்பந்தமோ வேலா?
உமக்குப் பழம் தேங்காய், ஒருபுறமாய் வாடா;
திருப்பழனி வேலா, [திருவருளைத் தாராய்.]
ஓங்குவார் அனுமான்; தாண்டுவார் கடலை;
ஒண்டிமரந் தோப்போ? ஒருவனும் பிழைப்போ?
ஒத்திருந்தா ளானால் வச்சிருப்போம் கூட;
ஒட்டடையா சாமை பட்டறைநா றுமே;
ஒட்டுடைசல் எல்லாம் மாறுவனோ கன்னான்?
ஒட்டனோ சமர்த்தன்; வெட்டினான் குளத்தை;
ஓராங்கல்லு மேலே தாயமாடும் பொண்கள்
ஒருமட்டமாம் பொண்கள் எருமுட்டைக்கும் போறார்;
ஒக்கவிளை யாடி வெட்கிப்போனாள் தோழி;
இருபதியால் நாலு.

இருக்கிறாரோ வேலர், கிழக்கு முக மாக?
இருளடைஞ்ச சோலை, சிவன் இருந்த மூலை,
ஈரெழுத்துச் சேலை, பார்வதிக் கோ கூறை,

இதுதானோ லங்கை? ஆடிவா குரங்கே,
இருட்டுவழி போனால் வெருட்டும்பனங் காடு;
இது வோசுடு காடு? மலைக்குறவன் வீடு;
இதுவோபெண்ணை யாறு? முழுகும் பொண்ணே,
போவோம்;
இண்டைச்செடி தேடித் திரிஞ்சவளே போடி;
இவளாரோ தோழி? பரியாசக் காரி;
இடிகுமரி பெத்த் வடிவழகோ பாலன்?
ஈனஜாதி நந்தன் ஸ்வாமிபதம் சேர்ந்தான்;
இருக்கவாடா வந்தே? சமைக்கவாடா சாதம்?
இருந்துடாதே பொண்ணே; மறந்துடாதே என்னை;
இருளெப்போ தொலையும்? பொழுதெப்போ மலரும்?
இருளாந்தை கூவும், மழைநாந்த லானல்;
இருசிகலி யாணம், அரிசிகலம் வேணும்;
இருவாட்சி முல்லை பயிராகும் கொல்லை;
இவளைத்தொட்ட தோஷம் எவிடம்போனால் தீரும்?
இந்திரன் பொறக்க இயமநகர் நடுங்க,
முப்பதியால் நாலு.

மூடுமுலைநந்தம் தாயல்லவோ மாதா?
முட்டாளோடா தச்சன், முன்னேவல்லை ஏற்றம்?
மூங்கில்வெட்டிச் சீவி முறங்கள்கட்டும் சாதி;
முந்திரியும் பூக்கும், மந்திரிகள் தோட்டம்;
முன்கொண்டாணி மேலே தங்கொட்டாதே காலை;
முல்லைமல ராதோ? நல்லபனி நேரம்;
மூண்டுதப்பா சண்டை, பாண்டவர்கள் எங்கே?
மூலபலத் தாலே ராமரெதிர்த் தாரே;
முக்காவேரி பாயும், கைக்களவன் தோட்டம்,
முத்தி,உங்கள் அண்ணன் முடிச்சவிழ்த்த கள்ளன்;
மூலையிலே நின்னு சேலைஇல்லை என்றாள்;
முன்பிறந்த பாலன் முலைக்கழுகி றானோ?
முன்ஒருநாள் சீதை கண்டகனாப்பொய்யோ?
முன்னேமலட் டாறு பொண்ணைமருட் டாதோ?
முண்டைமக ளாலே கொண்டபொண்ணைத் தோத்தான்;

மூடத்திலே வெள்ளி சாதிக்குதே மானம்;
மூடந்தன்னில் பெய்தால் நாடுசெய்த நன்மை;
மூச்சுடன்கண் ணுடி விற்குதுபொன் ஞலே;
முடியவந்தா ளேனே? அழுதபுள்ளை போட்டு;
முட்டத்தவன் செட்டி, மொளகுபயிர் இட்டான்;
துப்பத்தவன் எல்லாம் திருடவழி பார்த்தான்;
மூலமடை பள்ளம்; முனைகொண்டதே வெண்மை.
முள்ளிப்பள்ளம் ஜன்னல்; வள்ளிப்பொண்ணே காவல்;
முகூர்த்தமான வெள்ளி மேற்கேமுளை யாதோ?
நாற்பதியால் நாலு.

நல்லநடு ஜாமம் கள்ளர்வரும் வேளை,
நாய்குலைக்கக் கள்ளன் நடுத்தெருவே போஞன்;
நாட்டுக்கதி காரி தோட்டிதலை யாரி;
நாணலோரம் கொல்லை, கூலிக்காரன் கொள்ளை;
நாணலின் மறைவாய்ப் போறபொண் சிவப்போ?
நாள்பொருத்தம் கேட்டு போய்ப்பரியம் போட்டான்.
நாணுருனே பாலன், தூங்குருனே ஏணை?
நாடலையும் போது ராமர்எங்கே போனுர்?
நியாயந்தானே பொண்ணே? நானழைக்க உன்னை?
நானேடி கிழவன்? வேண்டாமோடி கணவன்?
நாத்தங்காலைச் சுத்தி நட்டவிளைவு முத்தி
நட்டாளே நடவை; போட்டாளே குறையாய்;

நாசமுற்ற மானம் பேய்ச்சலெங்கே, காணேன்?
நாடுதாண்டிப் போருன், மூடுபல்லக் கேறி;
நாடவ்வாளை வீசும், மணவாளன் ஏற்றம்;
நல்லவள் அழிஞ்சாள், பொண்மதி குலைஞ்சாள்;
நாடலையு ம் போது ராமரெங்கே போனுர்?
நானே உனக்குத் தேனேடி கரும்பு?
நட்சத்திரம் போலப் பெத்தாள்ஒரு புள்ளை;
நடைகுலுக்கிப் போனுள், விறகொடிக்கக் காட்டில்
அம்பதியால் நாலு.

அம்பெடுத்தா தம்பி, அவர்சமத்தைப் பார்ப்போம்;
வில்லெடுத்தா தம்பி, வீரியத்தைக் கேட்போம்;
அம்பிருக்கக் கோட்டை அழிஞ்சதென்ன இப்போ?
வில்லிருக்கக் கோட்டை சளைச்சதென்ன இப்போ?
அம்பிருந்தால் என்ன? ஆளப்படை இல்லை;
வில்இருந்தால் என்ன? வீரியங்கள் இல்லை;
அங்கலாய்ப்பாய்ச் சொன்னால் பொண்பொறந்த தென்ன?
அம்பாரம் மணக்க வந்துதே மரக்கால்;
அழகிட்டதோ பொண்ணே, கிழவனிட்ட மாலை?
வரகா உணர்ந்தால்....
அன்னங்கள் அழுமோ, ஆண்மயிலைத் தேடி?
அன்னமென்றிருந்தேன், அவள்நடந்த சாயல்;
அந்தமில்லாக் கொண்டை ஆர்முடிச்சார் பொண்ணே?
அந்தமும் அழகும் சந்த்ரமதி தானோ?
அந்தமலை ஓரம் கந்தர்வரார் கோலம்;
அண்ணனுக்கு வந்த பொண்எனக்குத் தாயார்;
அண்ணைக்கேநான் சொன்னேன்(அவள்) ஆகாதென்று
பங்கு;
அண்ணன்தம்பி வேணும், இன்னும்தம்பி ரானே.
அங்கேஎன்ன கும்பல்? ஆடுறானே தொம்பன்;
அன்னமுண்ட தாலே, ஆண்டிவந்து போனான்;
அம்பலத்தில் விட்டான், அறுபதியால் நாலு.

அன்னக்கொடி ஓங்கும் சின்னத்துரை கப்பல்,
அலையுதவன் கப்பல், அடிக்கனம்போ தாதே!
ஆனைக்கலங் காரம், அழகுதிரு நாமம்;
ஆனைபோற வீதி (ரகு) ராமர் போறார் சாரி;
ஆத்தாளும் மகளும் வேத்தாளுமாப் போனா;
ஆறுள்ளது மேற்கே; அருங்கடல் கிழக்கே;
அறத்தள்ளி இறைச்சால் ஆறல்லவோ வாய்க்கால்?
ஆத்தைநம்பித் தோழர் அளவாநட்ட ஏத்தம்
அல்லியங் குளமோ? அழகுள்ள நதியோ?
அந்தமும் அழகும் சந்த்ரமதி தானோ?

ஆர்பட்ட கடனே? அடிபட்டாய் மகளே,
தாய்பட்ட கடனே? தகப்பன்கை எழுத்தோ?
அந்தத்துறை கப்பல் வந்தசரக் கென்ன?
ஆனந்த வருஷம் அடிச்சபெருங் காத்து,
ஆறுகொண்டால் பாயும், வாலிகொண்ட சீமை;
ஆருடனே சொல்லி ஆத்துவேன் குறையை?
ஆனத்தூரான் மக்கள் போனதொரு திக்கு;
ஆனவல்லூ ரம்மா, காணவந்தேன் தாயே,
எழுபதியால் நாலு, ஏழை ரகுராமா,

ஏதோ ஒரு பாணம் சீதைகலி யாணம்,
ஏனழுதாள் சீதை? [ஏங்கியழு தாளே!]
லங்கைபோகு மளவும் புலம்பியழு தாளே!
யந்திரத்தைப் பூட்டி வாழ்ந்தகதை சொன்னுள்;
என்குறையைச் சொன்னுல் எழுந்தநிலாச் சாயும்;
ஏகாலியோ வண்ணுன் மாராயம்பொய் சொன்னுன்;
என்னசனி? பாவம்! கையைவிடேன், போவோம்;
ஏதுசுகம் கண்டாள், பரவிமக ளண்டை?
ஏழைப்பொண்ணைக் கொள்ள வாழைப்பந்தல் இட்டான்;

ஏழைக்கேது காலம்? சோதிக்குதே மானம்!
ஏழைவண்ணு னலே சிதைவனம் போனுள்;
எழுந்திருங்கள் தேவா; விடியற் காலம் ஆச்சே!
எழுப்புடா ரதத்தை, அருச்சுனு புரத்தை;
எழுத்திலே சமர்த்தன், குலத்திலேகம் மாளன்,
எழுதநல்ல புள்ளை, பழுதொருகண் நொள்ளை;
எழுதாத ஓலை சுருளாமோ பொண்ணே?
எழுதிப்படி தம்பி, ஏசப்போருர் ஐயா;
எண்பதியால் நாலு.

எருதும்கிழ மானுல் உழவுநிலம் போமோ?
பசுவும்கிழ மானுல் பால்குணமும் போமோ?
பாம்பும்கிழ மானுல் பல்விஷமும் போமோ?
பார்ப்பான்கிழ மானுல் பஞ்சாங்கம்பொய் யாமோ?
நானும்கிழ மானுல் நாணயமும் போமோ?

எங்கேயாலு முண்டோ பொண்களதி காரம்?
என்னடா வெளிச்சம்? எரியுதே ஸ்மசானம்;
எண்ணமெல்லாம் ஏண்டா இழவுமழை பெய்தால்?
என்னைக் கிருந்தாலும் இரவல்இந்தக் காயம்;
எண்ணெய்த்துளி பட்டு எடுத்ததலை நோவை;
எட்டுத்தெரு வீதி, செட்டித்தெரு பாதி;
இளநகையைக் காட்டிப் பணம்கையிலே கேட்டாள்;
இளநகைமே லாசை; பணமில்லாமல் போச்சே!
இளையகந்த சாமி மலையில்வந்தார், காணேன்;
இளந்தயிரும் சாதம் இடுவாள்ஒரு நேரம்;
இளைப்புவந்த நேரம் நினைப்பேன்பெரு மாளை.
இளமஞ்சுக் கொடியாள் பணமஞ்சும் குறையாள்;
எந்நேரமும் பொண்ணே, உன்இழவா நின்னேன்;
எந்நேரமும் சண்டை(என்) ஏத்தக்கரை யண்டை;
எப்போதும்போல் என்னைக் காத்தருள வேணும்;
எழுத்தைவெல்ல லாமோ விதிச்சபிரம்மா வாலே?
எழுதிவிட்டார் ஏனோ ஏற்றங்கள் இறைக்க?
என்னபாவம் பண்ணினேன், ஏத்தக்கோலும் கையும்?
பண்ணினபாவந் தானோ? பானையும் கையும்?
என்கணவன் போலே இருக்குதொரு சாயல்;
இணக்கமறி யாமல் கணக்கன்உதை பட்டான்;
இடையன்சின்ன ணலே கொழுக்கும்நத்தம் வாழை;
எழுதிவிட்டாள் மையை; அழுதுதுடைச் சாளே;
ஏசாதேடி பொண்ணே; (உன்) வாசல்வழி வல்லே:
எந்நேரமும் பழனி சந்நிதி முழக்கம்;
ஏகபோக மாக இருப்பார்நா ராயணன்;
தோத்திரண்டா ராமா, தொண்ணூறுடன் நாலு.
தோளுமேலே கொண்டை, போடுவாளோ முண்டை?

தொங்கலும் ஜடையும் பொண்களுக் கழகு.
தொடர்ந்தேநின்றாள் காளி, வந்தேனென்றாள் ஊரை.
தொப்பைவெள்ளை யானை கப்பலேறிப் போமோ?
தூரவில்லேடா மொள்ள, கரையில்லேடா சாய்க்க.

## 6

பிள்ளையாரே வாரீர், பெருமாளே வாரீர்,
சிவனரே வாரீர், பெருமாளே வாரீர்,
சி வனும் பெருமாளும் சேர்ந்துரதம் ஏறக்
குருவும் பெருமாளும் கூடிரதம் ஏற
ஹரியும் சிவனு ரும் பெரியரதம் ஏற,
நானும் பெருமாளை நடுங்கிப் பணி செய்ய;
ராமரே துணைவா, ராகவரே தண்டம்;
ரக்ஷிப்பதுன் பாரம்; ரெண்டுடனே வாரீர்;
மூன்றுடனே வாரீர், நாலுடனே வாரீர்;
அஞ்சுடனே வாரீர், ஆறுடனே வாரீர்;
ஏழுடனே வாரீர், [எட்டுடனே வாரீர்;]
எட்டடி அளந்து வெட்டினன் துரவே;
பத்தடி அளந்து பாச்சினன் துலாத்தே;
அஞ்சடி அளந்து அமர்த்தினன் மடலே:
எட்டடிக்குக் கோலு எடக்கிநாட்டு மூங்கில்;
பத்தடிக்குக் கோலு பவழக்காட்டு மூங்கில்,
அஞ்சடிக்குச் சோலு அழகிநாட்டு மூங்கில்;
எட்டடியும் கோலும் விட்டாடுமோ பானை?
பத்தடியும் கோலும் பன்னுடுமோ ஏத்தம்?
ஏத்தங்களைப் பார்த்தால் ஏமன்செட லாட்டம்;
உபயநதி வாழ ஒருபதியால் ஒண்ணு,

ஒவமைஸ்தலம் பார்க்கப் பயணம்என்ருர் ராமர்;
காசிநதி பார்க்கக் கடினம்பண்ணுர் ராமர்;
வையகங்கள் பார்க்க வரதர்போல நின்ருர்;
சிமைஸ்தலம் பார்க்கச் சிதைபோறேன் என்ருள்;
அங்குதய ஹனுமார் (அவர்) ஆண்டவன் பெருமாள்,
(அவர்) அழகுடன் பிரயாணம் பங்குஷமா லாலி,
வரதர் போல நின்ருர்......
இனி வருவார் வேலர்; இருபதியால் ஒண்ணு.

இனிஅருகர் கோயில் வலம்வருவோம் வாங்க;
பொன்அருகர் கோயில் போய்வருவோம் வாங்க;

கோயில்வலம் வந்தால் கோடிபலன் உண்டு;
அருகர்வலம் வந்தால் அதிகசம்பத் துண்டு;
நாதர்வலம் வந்தால் நல்லபலன் உண்டு;
சுவாமிவலம் வந்தால் சற்றும்குறை வில்லை;
அழுகாதடி வாலை அதிகசம்பத் தாகும்;
முப்பதியால் ஒண்ணு

முருகருக்கோ வள்ளி மோகனப்பொண் ஆனாள்;
கந்தருக்கோ வள்ளி கானமயில் ஆனாள்;
வேலருக்கோ வள்ளி வேடிக்கைப்பொண் ஆனாள்;
குமரருக்கோ வள்ளி கொடைவிளக்காய் நின்றாள்;
வேடருக்கோ வள்ளி வேங்கைமரம் ஆனாள்;
குமரருக்கோ வள்ளி கொன்னைமரம்* ஆனாள்.
நமோநா ராயணா நாற்பதியால் ஒண்ணு.

நாரணப் புரமோ, ஜானகி மடமோ?
ஜானகி மடத்தில் தங்குவார் வரதர்;
கோனேரி மடத்தில் குதிரை கொள்ளுமோ செல்லம்?
(அவர்) தங்குமிடம் எல்லாம் தொங்கும்தண்ட மாலை;
நிற்கும்இடம் எல்லாம் நித்தம்திரு நாளாம்.
நீலவர்ணம் பொய்யோ?...
பொய்யாநதி விட்டுப் போகமன சில்லை;
அன்னமயிலாட அம்பதியால் ஒண்ணு.

அந்திக்கு வரதர் ஆனைமேல் வருவார்;
என்றைக்கும் வரதர் தேர்மேலே வருவார்;
காலமே வரதர் கருடவா கனமோ?
அந்திக்கு வரதர் அன்னவா கனமோ?
நாளைக்கு வரதர் நாகவா கனமோ?
ஹரிஹரிகோ விந்தா, அச்சுதா, அனந்தா,
பச்சைநீல வண்ணா, பாரளந்த மெய்யா,
பாரளந்த மெய்யா, பாண்டவர்ச காயா,
அச்சுதனைப் பாட அறுபதியால் ஒண்ணு.

---

* (பா.ம.) குறத்தி மகளானாள்.

* [100-ஒரு பரியம். 1000-10 பரியம். அதததற்கு வேறு வேறு பாட்டு.]

ஆறுமுக வேலர் குறக்குலம்போய்ச் சேர்ந்தார்;
குறவன்மகள் வள்ளி கூடாதென்று சொன்னாள்;
வேடன்மகள் வள்ளி வேண்டாமென்று சொன்னாள்;
குமரிவள்ளிக் காகக் கொன்னைமரம் ஆனார்;
வேடர்வள்ளிக் காக வேங்கைமரம் ஆனார்;
பச்சைமரம் என்று பாவவினை சொன்னாள்;
கொன்னைமரம் வெட்டக் கூடாதென்று சொன்னாள்;
ஏழைபோல ராமர் இருந்தார்கான கத்தில்;
எழுபதியால் ஒண்ணு.

எழுதினாளே சீதை இலங்கையின் அழகை;
ராவணன் அழகை; ராக்ஷஸர் குணத்தை;
எழுதிஒப்பம் இட்டாள், இளங்கொடியாள் சீதை;
படித்துஒப்பம் இட்டாள் பசுங்கிளியாள் மாது;
ராவணன் அழகை ராக்ஷஸர் பிறப்பை;
எழுத்துள்ளவர் ராமர் தனக்குள்ள சீதை
கருத்துள்ளவ மங்கை [கருநிஎழுதி னாளே.]
எண்ணெய்வள நாடு, எண்பதியால் ஒண்ணு.

எப்போமழை பெய்யும் குப்பம்பயிர் ஏறும்?
குப்பம்பயிர் ஏறும், குடிகள்வந்து சேரும்?
கற்பூரம் விளையும், கர்லமழை பெய்யும்?
சொன்னது விளையும், சோதிமழை பெய்யும்?
வெற்றிலை விளையும், வேணமழை பெய்யும்?
வேணமழை பெய்யும், விடியல்பூஜை ஆகும்?
சொன்னது விளையும், சொர்ணபூஜை ஆகும்?
தொழுதேன்பக வானே, தொண்ணூறுடன் ஒண்ணு.

தொங்கும்சடை யாண்டி எங்கும்வரு வாரோ?
நீறுபூசும் ஆண்டி நித்தம்வரு வாரோ?
சங்குகையில் ஏந்திச் சாமிவரு வாரோ?

---

* இந்தக் குறிப்புப் பாட்டின் கீழ் எழுதப்பட்டுள்ளது.

பாலம்கையில் ஏந்திப் பாடிவரு வாரோ?
அன்றுரித்த மான்தோல், ஆசனம் புலித்தோல்,
நேற்றுரித்த மான்தோல், சித்தமும் கரித்தோல்,
கன்றுரித்த மான்தோல் கரடிமான் புலித்தோல்;
காவித்துணி வேலும் கையில்புத் தகமும்
கைவிடுவார் வேலர்.
வில்லுண்டையும் அம்பும் விடுவார்அந்த வேலர்;
காற்றடித்த தங்கே; கைகலந்தார் வேலர்;
தூள்பரந்த திங்கே; தோள்அசைந்தார் வேலர்;
தோள்அசைந்த போது தொடரிருந்த பாலன்.
கைகலந்த போது கைநிறைந்த பாரம்.
மாதவாகோ விந்தா, நூறுடனே ஒண்ணு.

———

# விராட பர்வ ஏற்றப் பாட்டு

பிள்ளையாரே வாரும்; பிழைவராமல் காரும்;
எனக்குத்தெய்வம் நீரே; உமக்கடிமை நானே;
ராமர்துணை வேணும்; வாரும்பெரு மாளே;
காரும்இந்த வேளை......[கார்கள் திரண்டு]
வந்துமழை பெய்ய வாழும்பயிர் உய்ய,
உள்ளபடி செய்வாய்; ஓடிவந்து மாலே,
ஓர்மடுவில் ஆனை ஏங்கியழும் போதே
ஓடிவந்து காத்தாய், ஓதுதிரு மாலே,
பாண்டவர் கதையைப் பாங்குடனே சொல்வேன்;
ஒருபதியால் ஒண்ணு.

உன்னுந்திரி யோனும் மன்னவரும் கூடிப்
பன்னுபாண்ட வர்க்குச் சொன்னதோர் வருடம்
இந்நிலந் தனிலே பண்ணும்அஞ்ஞாத வாசம்
பாண்டவர் தொலைத்து வேண்டிவரு வாரே;
காண்டீபன் முதலோர் [கடிதுவரு வாரே.]
இருபதியால் ஒண்ணு. இருந்ததோர் வனத்தில்
பொருந்திடும் முனியை அறிந்துதிரி யோனும்
வருந்திஅடி பணிந்து, பெருந்தவ முனியே,
பேசும்பாண்ட வர்க்கு மோசமாக யாகம்
முடிக்கவேணும் என்றான்; முப்பதியால் ஒண்ணு.

முதல்வன்திரி யோனும் முதலான முனியும்
இனிமையுடன் வேதம் கனிவுடனே விரிச்சுக்
காட்டிலே புகுந்து கஷ்டங்கள் பொருத்திக்
கனதணலை மூட்டி முனிவர்மந்த்ரம் காட்டி
வனந்தனிலே ஓமம் வளர்த்துகை யாலே,
வந்ததொரு பூதம், அந்தப்புவி மேலே;
நாற்பதியால் ஒண்ணு; நாரணர் அறிந்து
காரண முனிசெய் காரியமாம் யாகம்
தாரணியின் மீது சண்டனை நினைந்து

தான்வரவே செய்தார்; தருமரும் அறிந்து
வருபிரம சாரி ஒருவேடம் எடுத்து
வறுமையுடன் வந்தார்; அம்பதியால் ஒண்ணு.

ஐயரும் கண்டு அழுதுவந்த புள்ளை
அழைத்துமே எடுத்து, அந்தணரே, வாரும்;
சிந்தையில் விசனம் செப்பிடவே வேணும்;
ஒப்பில்மறை யோனே, இப்புவி தனிலே
எனக்கொரு விரதம்; அறுபதியால் ஒண்ணு.

அந்தமறை யோனும் ஐயரை வணங்கிச்
செய்யும்உப நயனம் செய்யவேணும் என்று
ஐவரை அடுத்தேன்; அதற்கொரு கலைமான்
அரியதோலைக் கொண்டு [ஆர்வமொடும் அப்போ]
பெருகிடும் வனத்தில் வருகும்வழி தன்னில்
எழுபதியால் ஒண்ணு.

என்கையில் இருந்த இன்பமாகும் தோலை
இவ்வனக் கலைமான் கவ்வியே பறித்துக்
கடுகினில் மறைந்து செடியினில் ஒளித்துச்
சேர்ந்துபோன தென்றான், சிறுவன்பிரம்ம சாரி.
சேதியை அறிந்தார்; எண்பதியால் ஒண்ணு.

என்றமொழி கேட்டு எடுத்தபாணம் வில்லும்
எழுந்தைவர் தாமும் ஏகுமான் வழியே
போகும்வழி தேடிப் [போனார்கள் கடிதாய்.]
எத்திசையும் பார்த்து இருத்தமானை நோக்கி
இளைத்துமே திரிந்தார், இந்தவகை யாலே;
தொண்ணூறுடன் ஒண்ணு.

தொந்தமாகும் காட்டில் தொடரும்மழை யாலே
தோணும்வெயி லாலே தூக்கமும் மயக்கமும்;
தாகவிடா யாலே தருமரும் தளர்ந்து
தண்ணீர் கொண்டுவரத் தம்பியரை ஏவத்
தக்கதோர் வனத்தில் [தடாகமொன்றைப் பார்த்துப்]
பூத்திடுந் தடாகம் பொருந்துபுனல் அள்ளி

அருந்தும்சகா தேவன் அப்பாலே மயங்கி
மெய்யுடன் விழுந்தான் [மேனியெல்லாம் சோர.]
அத்திநிக ராக ஆர்க்கும்வீம சேனன்
அன்புடைய நால்வர் அள்ளுபுனல் அள்ளி
அருந்துகையி லப்போ ஒருபதியால் நூறு.

பிள்ளையாரே வாரீர், பெருமாளே வாரீர்;
பெரியவனம் தன்னில் பேதமாய் இருக்க
ஆதியாம் தருமர் அம்மொழி அறிந்து
அடவியில் புகுந்து அரியபொய்கை நீரை
அன்புடன் எடுக்க அந்தகன் மறுக்க
அருவுருவம் காட்டிக் குருமொழி உணர்ந்தார்,
கொண்டுதம்பி மாரை; அண்டரும் மகிழ்ந்தார்;
அனைவரும் எழுந்தார் [ஆனந்த மாக.]
இக்கதை இருக்க; முக்கிய விராடன்
அக்கதையைச் சொல்வேன்; அறிந்திடுங்கள் தோழர்.
ஒருபதியால் ஒண்ணு. ஓங்குபுக ழாளர்
பாங்குகுரு நாடர் பாண்டவர்கள் ஐவர்
ஆண்டபுவி எல்லாம் தாண்டியேசூ தாடித்
தரணியெல்லாம் தோற்றுத் திரியோதன ராஜன்
சொன்னபிர காரம் பன்னிரண்டு வருஷம்
பாரவன வாசம் திரமுடன் செய்தார்;
இருபதியால் ஒண்ணு. இவர்ஐவர் தாமும்
முறைமுறையா வேஷம் மறையவர் மடையன்
மானமில்லாப் பேடி வாசித்துறை யாளன்
காவிதனை மேய்ப் போன் காரிழை பணிப்பெண்
நேரிழையா ளாக விராடபுரம் சேர்ந்தார்.
முப்பதியால் ஒண்ணு. முன்னவனைக் கண்டு
மன்னவன் பணிந்தான்; மறையவரே வாரும்;
வருடமிங்கே வாழும், வரிசையுடன் என்றான்;
நகுலசகா தேவர் நலமுள்ளபாஞ் சாலி
அனைவரு மிருக்க, நாற்பதியால் ஒண்ணு.

நாள்பல கடந்து தோள்பலத்த வீமன்
மடையனை அழைத்து மல்லுக்கட்டச் சொன்னார்;
இப்படி இருக்க, அப்புற மிருந்து
ஆனதொரு மல்லன் வென்றபல சாலி,
எனக்கெதிரி உண்டோ? என்றுபலம் பேசக்
கெங்கபட்டர் அப்போ மடையனை அழைத்து
மல்லுச்செய்யச் சொன்னார்; [மடையன்சம் மதிச்சான்.]
வந்தமல்லனோடே சுந்தரமுனி சொல்ல
அம்பதியால் ஒண்ணு. அவனும்இவன் மேலே
ஆர்த்துவந் தெதிர்த்தான் [ஆரவாரம் செய்தான்.]
தோளோடே தோள் கொட்டித் துஷ்டர்களை அறிந்து
முடியில்முடி முட்டி மூர்க்கமாய் இடித்து
முகத்தினில் அறைந்து நகைத்துவிழ மோதி
துவைத்துவிட்டான் அப்போ [தருமரும் மகிழ்ந்தார்.]
அறுபதியால் ஒண்ணு. அரசனும் மகிழ்ந்து
மடையனை அழைத்து மார்புறத் தழுவி
ஆரம் பதக்கம் ஆடைமுதல் எல்லாம்
வேணதும் கொடுத்தார்; வீமனும் மகிழ்ந்தான்;
தாம்உறையும் நாளில் கீசகனும் வந்தான்;
ஒருபதியால் ஒண்ணு.
ஏந்திழையைக் கண்டு அன்புடனே அப்போ
மோகம்மிகக் கொண்டான்; தோகையும் பயந்து
சுதக்கணக்குச் சொன்னாள்; அதற்குப்பின் அவனும்
அன்ங்கன்சரத் தாலே மனம்கசிந்து நொந்து
வண்ணமகள் தன்னைக் கண்ணியே தொடர்ந்தான்;
எண்பதியால் ஒண்ணு. ஏங்கிமனம் நொந்து
மாங்குயிலைப் போல மன்னன்சபை முன்னே
மண்மிசை விழுந்தாள் [மற்றவர்கள் கலங்க];
அந்தக்கொடும் பாவி சந்தமட மானைக்
கைப்பிடிக்க என்று வெய்யவினை வானன்.
சூரிய பகவான் தூதனை அனுப்பிப்
பாதகத்தைத் தள்ளிப் பட்சம்வைத்துக் காத்தான்;
தொண்ணூறுடன் ஒண்ணு.

நேராக மடக்கி ராத்திரியில் சாடப்
போர்த்திறம் புரிந்து பூமியில் புரட்டிக்
குத்திவிழ மோதித் தத்தித்தலை சாய
மோதினன் மடையன் [முழுப்பலத் தோடே.]
கீசகன் துடித்துக் கிலேசமுற்று மாண்டான்;
பாதகன் மடியப் பாஞ்சாலியும் கண்டு
தீர்ந்தேன்பயம் என்றாள்; [தைரியமும் கொண்டாள்.]
பிள்ளையாரே வாரீர், பின்னும்தம்பி மார்கள்
சொன்னபடி செய்தார்; [சோகமும் விடுத்தார்.]
கீசகன் மடியக் கேட்ட குரு நாடர்
வாட்டம்இல்லா மாடு ஓட்டிவாடா என்று
மச்சவள நாட்டை அச்சமில்லாக் காட்டில்
ஆனிரையை ஓட்டி [அடித்துவரச்சொன்னார்.]
ஒருபதியால் ஒண்ணு. ஓங்குபுகழ்க் கன்னன்
துரியனுக்குச் சொன்னான், [துரிசுடனே செய்ய;]
விராடனுடை மாட்டை ஓட்டிவரச் சொன்னான்;
அந்தமாக வந்தால் ஐவரங்கு இல்லை;
இந்தப்படி செய்வாய் துரியோதனா, என்றான்;
அப்படியே செய்வோம்; அவசரம் வேண்டாம்;
இருபதியால் ஒண்ணு. ஏகவெள்ளம் போல
ஆனிரையை விட்டால்; மாடுபிடி சண்டை
போடவே பொருந்தப் பூபதி விராடன்
புத்திரரும் கூடி ஆனைபரி தேர்கள்
சேனையொடு கூடத் தெற்குத்திசை வந்து
திரிகர்த்தனைச் சாடித் [திக்குமுக் காட]
முறியஅடித் தாரே; முப்பதியால் ஒண்ணு.

விராதனைப் புடிச்சு விந்தைத்தேரில் கட்டித்
தகைத்துக்கொண்டான் வீமன் தருமருரை யாமே;
தாக்கியேமல் லாடி வீக்கிய விராடன்
நோக்குமகி மாக [நொக்கியே அடித்து]
வந்தவனை ஓட்டி மன்னவனை மீட்டான்;
நாற்பதியால் ஒண்ணு. நால்வர்களும் வந்து

நன்மைசெய்தி ரென்று மன்னவன் மகிழ்ந்தான்;
பின்னுமந்த மாட்டைப் பெருமையுடன் மீட்டார்;
அருமையிது என்று அங்கவர் இருக்க,
வடக்குத்திசை வந்தார் மன்னன்முத லோர்கள்.
அம்பதியால் ஒண்ணு.

அரவக் கொடி ராஜன் இரவிசிறு பாலன்
கங்கைதரு சீலன் கனத்தமறை யாளன்,
மிகுந்தபடை யோடே பொருந்துபசுக் கூட்டம்
துரத்தியே மடக்கிச் சூழ்ந்து கொண்டு நின்றார்;
அறுபதியால் ஒண்ணு. அங்கிருந் திடையர்
அரசன்மனைக் கோடி ஆரையும்கா ணமல்
உத்தரனைக் கண்டு மெத்தவே அழுது
அஸ்தினு புரத்தில் அனைவர்களும் வந்து
ஆவினத்தை எல்லாம் சாய்த்துக்கொண்டு போனர்;
எழுபதியால் ஒண்ணு. இடையர்சொன்ன வார்த்தை
யாவையும் அறிந்து படைஎடுப்பேன் என்று
பாலகன் எழுந்தான், பருத்தரதம் ஏறி;
பாகனந்தப் பேடி ஆகவரும் போதில்
அண்டரண்டம் எல்லாம் கொண்டபடை கண்டான்;
எண்பதியால் ஒண்ணு. எங்கும்குதி ரைகள்,
கண்கொள்ளா ரதங்கள், எண்இறந்த யானை,
மண்ணிறைந்த சேனை [மார்புதட்டி வந்தார்.]
பேரிகை முழக்கம், பெருத்ததிரும் மேளம்,
நெருங்கிய கொடிகள், பொருந்திய குடைகள்,
நேர்ந்தபடை கண்டான்; நெருங்கியே வந்தான்;
தொண்ணூறுடன் ஒண்ணு. சொல்லிமுடி யாது;
வல்லப சேனை மன்னவர்அ நேகர்;
எந்தரதம் சும்மா இந்தமுனை காண
என்றுமனம் வாடி, துன்றுமனை சேர்வேன்;
என்றெடுத்தான் ஓட்டம்; இறைவன்மகன் அப்போ;
பிள்ளையாரே வாரீர்; பேடிஅது கண்டு
ஓடியே தொடர்ந்து, ஓகெடுவாய் பிள்ளாய்,

வாகடுமை யாகத் தேரினி விருந்து
சாரத்தியம் செய்தால் தனுவதை வளைத்துப்
பனியெனப் படுப்பேன்; இனிரதமே றென்றான்;
ஒருபதியால் ஒண்ணு. ஓடிவிட்ட பாலன்
வாடிரதம் விட்டான்; வன்னியரு கோடிச்
சொன்னசிலை ஏந்தி மன்னர்கள் மயங்க
அம்புமழை தூவி உம்பரும் மயங்கத்
தம்பதி களிக்கச் சாய்த்துக்கொண்டார் மாட்டை;
இருபதியால் ஒண்ணு.

எதிர்த்துவந்த கர்ணன் அதிர்த்துரதம் ஓட்டி
அம்புகள் பொழிந்தான்; அர்ஜுனனும் அப்போ
காண்டீபம் வளைத்துக் கனமழை பொழிந்தான்;
இணையிலாத கர்ணன் இளைத்தெடுத்தான் ஓட்டம்;
முப்பதியால் ஒண்ணு. முன்உரைத்த நீயே
சொன்னதெல்லாம் விட்டுத் துடைகளெல்லாம் நோகப்
படைகளெல்லாம் போகப் பார்த்தவர் சிரிக்க
ஓடுவது நன்றே! உங்கள்மனம் காணத்
தங்கள்மனம் நோகத் தளர்ந்துமேனி வாட
நாற்பதியால் ஒண்ணு. நல்லமறை யாளன்
செவ்வனிந்த வாறு செப்பியே திரும்ப
ஒப்பில்லாத் துரோணர் உயுத்தமது செய்து
செயித்திருக்கும் பார்த்தன் தேர்முன்தேர் விட்டார்;
தேசிகன் வரவைத் தேர்விஜயன் கண்டான்;
அம்பதியால் ஒண்ணு. ஆசிரியனைக் கண்டு
அர்ஜுனன் பண்டு இச்சைபல பேசி
ஏதுசமர் என்றான்; வேதமுனி அப்போ
வேந்துநெறி யாகும்; போந்திடுவாய் என்றான்;
எறிகணை தொடுத்தான்; மறுகணையும் விட்டான்;
அறுபதியா லொண்ணு. அண்டத்தவர்க் காகச்
சண்டைமெத்தச் செய்தார்; சதுரங்க பலமும்
கதறிஓடிப் போகப் பெரியவர் துரோணர்
பின்னும்சமர் செய்தார்; பெரியவில்லும் போகித்.

துரோணரும் இளைத்தார்; துரியோதனன் கண்டான்;
எழுபதியால் ஒண்ணு இனியவர் எடுப்பர்;
தளராத சேனையெல்லாம் நக்கஅசுவத் தாமா
மிக்கபோர் விளைத்தான்; நக்கனரு ளாளன்
அர்ஜுனன்வில் நாரி அற்றுவிழ எய்தான்;
வெற்றிவந்த தென்றான்; வேந்தனும் மகிழ்ந்தான்;
எண்பதியால் ஒண்ணு. ஏறும்தேர் விஜயன்
இதற்குத்தோற்க மாட்டான் என்றுமனம் எண்ணிச்
சுந்தரமாம் வில்லு, தந்தவொரு பாணம்
அந்தஅம்பை எடுத்து அன்னவனைச் சாடித்
தோற்கடிப்போம் என்று தோற்காத விஜயன்
நாரிஒண்ணு பூட்டி நாலுபாணம் விட்டான்;
தேர்கள்பொடி யாச்சு; செகத்தோர் மகிழ்ந்தார்;
அர்ஜுனனும் அப்போ சிறுவனை எதிர்த்தான்,
கீர்த்தியே மிகுந்தான் [கண்டவர்கள் போற்ற,]
பிள்ளையாரே வாரீர்; பேருள்ள பெரியோன்
தீதுகளைத் தீர்த்தான்; வீஷ்மரை எதிர்த்தான்;
தாஷ்டிக முடனே தனஞ்செயனும் அப்போ
அனந்தம்அம்பு விட்டான்; அத்தனையும் விழ
உத்தமன் உரைத்தான்; ஒருபதியால் ஒண்ணு.

ஓச்சலிலாப் பாணம் பாச்சினான் கிழவன்;
பார்த்தனும் அலுத்தான்; தீர்த்தன்மேல் அம்பு
தேர்விஜயன் விட்டான்; [விட்ட அந்தப் போதில்]
சாரதி மடிஞ்சு சலித்தவன் இருந்தான்;
கெலித்தபடை எல்லாம் கேலிக்குறிக ராச்சே!
இருபதியால் ஒண்ணு.

எடுப்பாய்ஓட்ட மென்பார்; நடுக்கம்மெத்த ஆனார்;
ராஜகூட்ட மெல்லாம் யோசனையில் வீழ்ந்தார்;
ஓங்குவில் விஜயன் மோகனக்கணை யாலே
மூர்ச்சையாகச் செய்தான்; ஆச்சரிய மாக
அனைவரும் விழுந்தார்; முப்பதியால் ஒண்ணு.

மூர்ச்சையென்ற ராஜா [முன்னேவந்து நின்ருன்.]
முடுக்கியே சிலையை எடுத்துநிரன் வந்தான்;
படுத்திருந்தோர் எல்லாம் பாங்குடன் எழுந்தார்;
தாங்கிப்பிடி சிலையை வாங்கியே தரித்தார்;
ஏங்கிமனம் நொந்தார்; எடுத்தார்கள் ஓட்டம்;
நாற்பதியால் ஒண்ணு. நாகக்கொடி மன்னன்
வேகத்துடன் ஓட விஜயன்கணை விட்டுப்
பகைத்தவன் தன்னைப் பலபலவாய் ஏசி
இலகிய கிரீடம் இடிபடக்கீழ் வீழ்ந்தான்;
நீலகிரி போலே ஓலமிட்டுத் தன்னை
அம்பதியால் ஒண்ணு. அஞ்சினவர் மேலே
அர்ஜுனன் தயவாய் அன்புடன் செய்ய
உத்தரனைப் பார்த்து, ஊருக்குநீ திருப்பு,
தேரதனை என்ருன்; செப்பவே திரும்பி
ஒப்பொருவர் இல்லா, மெய்ப்பொருவர் இல்லா
விஜயன்இருந் தானே; அறுபதியால் ஒண்ணு.

ஆனவன்னி சேர்ந்து அலிவடிவு மாறி
அங்கொருபூங் காவில் இங்கிதமாய் நின்ருர்;
இந்தச்சிறு பாலன் வந்தவகை எல்லாம்
தந்தைவந்து கேட்டுச் சிந்தைநொந்து வாழ்ந்தார்;
தேற்றிக்கெங்கு பட்டார், எழுபதியால் ஒண்ணு,

இங்கிருந்த பேடி [எதிர்த்துச்சமர் செய்து]
அங்குவருவோரை மங்கிவிழச் செய்து
மாடுவ்ரும் என்று நாடியே விராடன்
நலத்துடன் இருந்தான்; பலத்தவரை எல்லாம்
துரத்திச்சுப வார்த்தை ஒருத்தன்வந்து சொன்னுன்;
எண்பதியால் ஒண்ணு. ஏக்கமது நீங்கி
அங்கவரும் வந்தார்; பொங்கினுன் விராடன்;
சங்கையெல்லாம் தீர [நடந்ததை எல்லாம்]
உத்தரன் உரைத்தான்; மெத்தத்தர்ம ராஜர்
வெளிப்பட மகிழ்ந்தார்; களித்தனன் விராடன்;
தொண்ணூறுடன் ஒண்ணு. துவாரகையில் உள்ள

துரோபதை தகப்பன், தோழமகா ராஜன்
சுந்தர அழகி மைந்தனபி மன்னன்,
வந்தவர் மகிழ்ந்தார் [வந்தவனைக் கண்டு.]
உத்தரை தனக்கும் உற்றதம்பி மன்னர்க்கும்
நல்லமணம் செய்தார்; நாராயணு ராமா!

# அரிச்சந்திரன் ஏற்றப்பாட்டு

பிள்ளையாரே வாரும், பிழைவராமல் காரும்;
மழைவரக்கண் பாரும்; மகாதேவர் மகனே,
விக்கினரே, வாரும்; சர்க்கரைகற் கண்டு
முக்கனியும் தேனும் முள்ளுடன் பலாக்காய்,
முடிச்சுடன் கரும்பு, அதிரசம் வகைகள்,
அவல்கடலை தேங்காய், அப்பனே, உனக்கு
ஒப்புடன் படைப்பேன்; உன்னைத்தொழு வோர்க்கு
என்றும்துணை செய்வாய், ஈசுவரன்றன் மகனே,
ஒருபதியால் ஒண்ணு.

ஆரப்பூங் கோயில் அம்மனைத் தொழுதேன்;
அம்மனைத் தொழுதேன்; அரிச்சந்திர புராணம்
என்னு லானமாத்திரம் ஏத்தப்பாட்டாய்ப் பாடத்
தப்புபிழை யானல் சகலரும் பொறுப்பீர்;
இருபதியால் ஒண்ணு.

இந்திரரும் தேவர் ரிஷிகள்முனி வோரும்
கொலுசபை இருந்தார்; தேவேந்திர ராஜன்
முனிவரரைக் கேட்டான் [முந்திமுகம் பார்த்து];
பொய்சொல்லாத பேர்கள் பூலோகத்தில் உண்டோ?
முப்பதியால் ஒண்ணு.

பூதலம் அறிந்த முனிவர்கள் உரைத்தார்;
அயோத்தியை ஆளும் அரிச்சந்திர ராஜன்
என்னுடைய சிஷன் பொய்என்ற வசனம்
நாவினல் உரையான். நல்லது வசிஷ்டா,
அவன், நாவுதப்பா னென்று நானறிய உரைத்தாய்.
அவனுடைய நெஞ்சை அறிந்தவன்போல் சொன்னாய்;
பித்தம்தலைக் கேறிப் பினத்துகிறாய் போடா;
நாற்பதியால் ஒண்ணு.

நான்பினைத்த வில்லே; நீ அதட்டிச் சொன்னாய்;
சந்திர சூரியர்கள் தெற்குவடக் கானாலும்
சத்தியம் தவறான், என்னுடைய சிஷன்;
இருவர்முனி வோரும் வாக்குவாதம் செய்தார்.
ஐம்பதியால் ஒண்ணு.

அருந்தவ முனிவர் நாரதரும் வந்தார்;
ஒருவருக் கொருவர் உயுத்தம் வேண்டாம்;
நீங்கள் – இருவரும் சபதம் இன்னதென்று சொல்வீர்;
சத்யஅரிச் சந்திரன் பொய்என்ற வசனம்
நாப்புரண் டுரைத்தால்—இந்த -ரிஷிதபசை விட்டு
நான், நீசகுல மாவேன்; (நிந்தைக்கிட மாவேன்.)
அறுபதியால் ஒன்ணு.

அரிச்சந்திர ராஜன் – ஒரு பொய் சொல்லாமல் போனால்
என்தபசில்—பாதி நான்—இனைத்து விட்டால் தாறேன்;
இவர்களிட்ட தோர்சபதம் இந்திரனும் கேட்டு
தெய்வலோகம் போனார், சேதியறிந் தாரே.)
வசிஷ்டாமா முனியும் தபசுக்கு நடந்தார்;
எழுபதியால் ஒண்ணு.

ஏங்கிவிச்வா மித்ரன் தெய்வத்தைத் தொழுதான்;
மன்னன் அரிச் சந்திரன் சொர்ணதானம் செய்ய
ஜயகண்டி போட்டான்; தபசி போல முனிவன்
அரச னண்டை வந்தான். என்பதியால் ஒண்ணு.
ஏன்ஜயா, முனியே உன் பாதமே சரணம்;
பட்சம்வைத் தருள்வீர்; சத்யஅரிச் சந்திரா,
நான், வேள்விசெய்யப் போறேன், நீ, கோடிபொன்
தருவாய்.
திரவியங்கள் தந்தேன்; எடுத்துக்கொண்டு போங்கள்;
உன்வசத்தில் தானே ஒருபொழு திருந்தால்
நாளைவந்து நானும் எடுத்துக்கொண்டு போறேன்.
தொண்ணூறியால் ஒண்ணு.

துஷ்டன்விச்வா மித்திரன் சூதுசெய் தயோத்தி
இட்டதோர் பயிரைப் பன்றிகளும் மானும்
மிருகத்தால் அழித்தான்; காவல் காக்கும் பேரைக்
கொசுகுகளும் கௌவிக் கொட்டச்சொல்லி விட்டான்;
நாட்டுக்குடி எல்லாம் ராஜனோடே சொன்னார்;
பூபன்அரிச் சந்திரன் புத்திரனும் கூடச்
சத்திய கீர்த்தியும் சநிருடனே வேட்டை
கானகத்தில் உள்ள கனமிருகம் எல்லாம்;
ஒருபதியால் ஒண்ணு.

உமையவருங் கூட இறங்கினார்பூங் காவில்,
நித்திரையும் செய்து சொப்பனமும் கண்டு
தேவியுடன் சொன்னார்; திரும்பினார் அயோத்தி;
முனிவன் விசுவாமித்திரன் வானப் பொண்களை அனுப்ப,
ஆண்டகுடை கேட்டார். இருபதியால் ஒண்ணு.

இறைவன் குலத்தோன் அடிச்சான்சவுக் காலே;
துடிச்சான்விசுவா மித்திரன்; அடித்தாயே உன்றன்
முடிதனில் உதைப்பேன்; (முடிசிதறிப் போக);
ஐயனே, சரணம், மெய்யனே, உன் பாதம்
கிரீடங்கள் பட்டுக் கொப்புளிச்சுப் போமே!
முப்பதியால் ஒண்ணு. முனியே சரணம்;
குத்தங்கள் பொறுத்துப் பட்சம்வைத் தருள்வீர்;
அல்லவென்றால் குத்தம் அடியேனால் பொறுப்பீர்;
பொய்என்ற வசனம் நாவினால் உரையேன்;
நாற்பதியால் ஒண்ணு.

இந்த, நாடுநகர் சேனை ராச்சியம்போனாலும்
பொய்என்ற வசனம் கனவிலும் உரையேன்;
நீர், அப்படியே தாரும், அரசனரிச் சந்திரா.
சொல்குத்தங்கள் உண்டோ? சுவாமிவிசுவா மித்திரா,
நீர், இல்லை என்று சொல்லும்; இது, சத்தியந்தான் ஐயா,
நான், தாரை வார்த்து விட்டேன், அம்பதியால் ஒண்ணு.

அடியேன் உன் வசத்தில் வைத்தபொன்னைத் தாரும்;
மூத்திரைகுலை யாமல் இருக்கும்தங்கள் பொன்னும்நான்
தாரைவார்த்து விட்ட தனங்கள்என்ன தரமோ?
நீர், அப்படியே தாரும்; அரசன்அரிச் சந்திரா,
ஆறெட்டுக் கெடுவில் நட்சத்திரன் கையில்
செலுத்திவிடும் பிள்ளாய். அறுபதியால் ஒண்ணு.

அரிச்சந்திர ராஜன் கௌசிகனார் கையில்
பாரகடன் பட்டுப் பரதேசி ஆகிப்
பரதேசம் போறேன்; காசிதேசம் போறேன்;
இந்தக்கடன் தீரவேணும்; (கடமை,செய்ய வேணும்.)
நட்சத்திரன் கையில் சிக்கினேன் சிவனே!
எழுபதியால் ஒண்ணு.

இதற்கு, என்னசெய்வோமென்று ஏங்கிஅரிச் சந்திரன்
தாறேன் என்று சொல்லக் கூடவாரும் என்றான்.
பசிக்குது எனக்கு, நீ, சோறு போடும் என்றான்.
இந்தக்கான கத்தில் சோறுதேடினால் வருமோ?
எண்பதியால் ஒண்ணு.

எட்டியே அடிச்சான், கையில், கிட்டிகளைக் கொண்டு.
பொன்கொடுத்தால் தாரும்; ஒரு, பொய்யாகிலும்
சொல்லும்.
அண்ணாந்தாளைப் போட்டு அடிச்சால் நானென்
செய்வேன்?
அடிதனை நிறுத்தித் தனைஎடுக்கச் சொன்னான்.
தொண்ணூறுடன் ஒண்ணு.
தோளிலே எடுத்துக் காசிக்கு நடந்தான்.
உன்னைநான் எடுக்க, என்னை, வேதாளம் மறிக்க
வெட்டினேன் வாளால் கிட்டவர ஒட்டாமல்.
அக்கினி மறிக்க அவித்தாள்சந் திரமதி.
அதற் கப்பாலே போனார் [அதுக்குமேல் சொல்வேன்.]
பிள்ளையாரே வாரீர். பூபனரிச் சந்திரன்

காசிதீர்த்தம் கண்டான், ஸ்நானங்களைச் செய்தான்.
தலங்களைப் பார்த்தான். [தாழ்ந்து வணங்கினன்.]
இடந்தனில் கருடன் எதிர்வரக் கண்டான்.
நரையான்வல மாக நன்மையாச்சு தென்றுன்.
ஒருபதியால் ஒண் ணு.

உலகம்ஆளும் அரசன் உத்தமியும் கூடச்
சத்திய கீர்த்தியும் புத்திரனும் கூட
வீசுமாங் கனியும் முல்லைஇரு வாட்சி
அன்னங்கள் மயில்கள் ஆடும்பூங் காவனம்
காசிவிசுவ நாதர் பாதமே கண்டான்.
இருபதியால் ஒண் ணு.

ஈசுவரனர் மகனே, விக்கினரே, தண்டம்;
நந்திகேசு வரனே, விசுவநாதரே சரணம்.
சத்தியந்தப் பாமல் தவமுனி ருணத்தை
நீ, வெற்றியாய் அளிப்பாய்; விச்வநாதரே, தொழுதேன்.
முப்பதியால் ஒண் ணு.

முடிபொறுத்த மன்னன் அடியேனைத் தொழுதால்
அல்லல்விட்டு நீயும் அரசாள்வாய் பின்பு.
அவர், வாக்குக்கேட்டு வீதி அலங்காரம் பார்த்துக்
காசிப்பட்ட ணத்தில்—உன்—பொண்சாதியை வித்து
நீ, பொன்னைத்தரு வாயே. நாற்பதியால் ஒண் ணு.

நாடுநகர் தோத்து நட்சத்திரன் கையில்
அடிபட்டுநான் நொந்தேன்; காசிஈசு வரனே,
இந்த—வீதிதனில் பெண்டை வித்துத்தர வே ணும்.
அன்னைநான் இருக்க என்னைநீரும் வித்து
அந்தரிஷி ருணத்தைத் தீரும். ஐம்பதியால் ஒண் ணு.

அன்னைசந்திர மதியைக் கொள்ளுவாரும் உண்டோ?
அக்கினி பகவான் அந்தணரைப் போலே
வந்தடிமை கொண்டான். ஏந்திழையாள் பாலன்
மாங்குயிலைப் போலே மறையவன்பின் போனர்.
அறுபதியால் ஒண் ணு.

அன்னையைநான் வித்துச் சொன்னதோர் கடனைச்
செலுத்திவிட்டேன் ஐயா. நீ, தந்தபொருள் எல்லாம்
தரகுப்பணம் ஆச்சு; தவமுனி ருணத்தைத்
தாருமரிச் சந்திரா (தாமசம்இல் லாமல்.)
என்னையேநான் வித்து ரிஷிருணத்தைத் தாறேன்.
எழுபதியால் ஒண்ணு.

என்னைக்—கொள்ளுவாரும் உண்டோ? பின்னுங்காசி
தன்னில்?
பூமன்னம ராஜன் புலையனாக வந்து
அடிமையாகக் கொண்டான் (அரிச்சந்திரன் தன்னை).
நீ, சொன்னபொருள் தந்தேன், சுவாமிநட்சத்தி ரையா;
ஒரு, பொய்சொல்ல மாட் டாமல்—என்—பொண்டு
புள்ளை வித்தேன்.
நான், புலையனுக் கமைந்தேன் (பூண்ட பணியாளாய்.)
எண்பதியால் ஒண்ணு. என்னசெய்வேன் ஐயா?

கன்றைநான் உரிச்சேன்; கையறுத்துக் கொண்டேன்;
வீரபாகன் வந்து தாறுமாறென் றேசி
மயானத்தில் இருந்து பிணம்சுடு பணமும்
முழத்துணி அனுப்பி வாய்க்கரிசி தின்னு;
நீ, காத்திரு என்றான், தொண்ணூறுடன் ஒண்ணு.

அவன், சொற்படி தவறேன். அவன், அப்படி இருக்க
மறையவனும் சந்திர மதிதனை அழைச்சுத்
திதிவருகு தென்று புள்ளைகளும் போனார்;
உன், புள்ளையும் கூடத் தெர்ப்பையும் இலையும்
பறிச்சுவரச் சொல்லி அனுப்படிநீ சந்தி.
பிள்ளையாரே வாரீர். பிள்ளையை அனுப்பி
வனத்துக்கவர் போக வழிசகுனம் பார்த்தாள்;
இடந்தனில் நரையான் எதிர்வரக் கண்டாள்;
வலந்தனில் கருடன் வருகுதே மகனே,
ஆகாத சகுனம் ஆகுதே மகனே,
ஒருபதியால் ஒண்ணு. உன்னைநான் அனுப்பி

நான்—என்னமாய் இருப்பேன்?—நீ—செடியில்
நுழை யாமல்
கடுகிவரு வாயே; காட்டிலவர் ஓடிக்
காரெலை பிரண்டை காய்கறி இலைகள்
நேராகப் பறிச்சார்; லோகிதனைக் காணோம்.
இருபதியால் ஒண்ணு.—அவன்—எங்கேஎன்று தேடி
வழியில், கண்டவரைக்கேட்டார்; (கண்டவர் சொன்னார்.)
தெர்ப்பையும் பறிச்சான்; தீண்டித்தே அரவம்.
நல்லதென்று சொல்லி நடந்தோடி வந்து
சந்திர மதிக்கு வந்துசேதி சொன்னார்;
முப்பதியால் ஒண்ணு. முனிவன்விசுவா மித்திரன்
சதியென்றறி யேனே;—இதற்—கென்னசெய்வே னென்று
அவள், ஏங்கியே புலம்பி மறையவனைக் கேட்டாள்;
நீ, வீட்டுவேலை செய்து பார்த்துவாடி என்றான்.
அவள், அப்படியே செய்து அழுதவள் புலம்பப்
போஎன்றவர் சொன்னார்; நாற்பதியால் ஒண்ணு.
நடந்தாளே புலம்பி, நாடுவிட்டுக் காடு;
வனத்தில்கண்ட பேரை வழிகேட்டுப் போனாள்;
அருமைமக னை லோகிதனைக் கண்டாள்;
உணவுஉண்ணச் சொல்லிச் சந்தியும் புலம்ப
ஐம்பதியால் ஒண்ணு. அப்பனே, மகனே,
ஆருயிர்ப் புதல்வா, என்மகனே, வாடா;
எழுந்திரடா என்று ஏந்துகொங்கை மேலே
தாங்கிஅணைச் சாளே; தகப்பனைப் பிரிஞ்சாய்;
வனத்திலே இறந்தாய்; அறுபதியால் ஒண்ணு.
ஆரோவேறு புள்ளை வேறேஎனக் குண்டோ?
பஞ்சணை மெத்தைமேல் படுக்கென்றால் படுக்காய்;
கொஞ்சித்தழை மேலே கூசாமல் படுத்தாய்;
கவுசிக முனியால் விடுநா டிழந்தோம்.
எழுபதியால் ஒண்ணு.
என்னைப்பணிந் தோரை நான்பணிய லாச்சே!
மறையவர்க் கடிமை; மகனே, விலைப் பட்டோம்;
காட்டிலே அரவம் கடிச்சுதே மகனே,

தந்தைதாய் மறந்தேன்; வந்துநான் அழுதேன்;
எண்பதியால் ஒண்ணு. ஏந்தும்கொங்கைப் பாலே
நீ, சார்ந்துஉண்ண வாராய் சங்கடங்கள் தீர.
பொன்னினால்தீ வட்டி புடிப்பார்கள் தாதி;
மின்னிய மிமிலிப் பூச்சிவிளக் காச்சே!
பெத்துநான் வளர்த்தேன்; பூமிக்கிரை இட்டேன்;
பொன்னான மேனி மண்ணின்மேல் புரண்டாய்.
தொண்ணூறுடன் ஒண்ணு. துன்னும்விசுவா மித்திரர்
நான், என்னசெய்வேன் ஐயா, எனக்குரிமை செய்வாய்,
என்றுநான் இருந்தேன்; (இப்படியா ஆச்சே!)
என்உயிரைப் போக்கி உனக்குரிமை செய்வேன்;
பிள்ளையில்லாப் பாவி பெருமலடி ஆனேன்.
விதிவசமும் இதுவோ? விச்வாமித்ரன் மாய்கை.
பிள்ளையாரே வாரீர். பிள்ளையை எடுத்துப்
புலம்பியே நடந்தாள்; இது, முன்செய்த வினையோ?
செந்தணல் அடைக்க வந்தேனே மகனே!
சுடலையி லிருந்த புலையனும் எழுந்தான்;
ஒருபதியால் ஒண்ணு.

ஓடிஅவன் வந்து ஆரடிநீ என்றான்.
என், மைந்தனும் இறந்தான்; தணல்மூட்ட வந்தேன்.
கூலிக்காசு தந்துநீ மூட்டடி தணலே.
வகைஇல்லே என்றாள். மங்கிலியம் கேட்டான்.
வானவர் முனிவர் மகாதேவரும் காணார்;
இருபதியால் ஒண்ணு; என்னுடைய தாலி
இந்தநீசன் கண்டான்—ஐயா—என்னுடைய புருஷன்
காண்பதேயல் லாமல் கண்டவரும் உண்டோ?
அரனயனை நொந்து அழுதவள் புலம்ப
கழுத்திலுந் தாலி காணவும்ஒண்ணாதே.
ஒருபொய்சொல்ல மாட்டாமல் உளம்நொந்து போனார்.
முப்பதியால் ஒண்ணு. முன்செய்த வினையோ?
மன்னவன் மகனே, என்றவள் புலம்ப
மதிதயன் மகளும்—இவர்—மன்னனென் றறிந்து.

மயானம்காக்க வந்த வகைஎனக்குச் சொல்லும்;
நாற்பதியால் ஒண்ணு. என், நாயகியை வித்து
நற்பொருள் தரகு சம்பளம்ஆச் சென்றார்;
என்னையேநான் வித்து ரிஷிருணத்தைத் தந்தேன்;
செத்தமா டுாச்சேன்; சுடலைதனைக் காத்தேன்;
அம்பதியால் ஒண்ணு. அசத்தியம் வராமல்
கால்பணமும்தந்தால் தகனம்செய்து வைப்பேன்.
அழுதுமெள்ளப் போயி மறையவனைக் கேட்டாள்;
கெதியில்லை என்றான், எத்தன்விச்வா மித்திரன்.
காசிமகா ராஜன் பாலனை முறித்து
அறுபதியா லொண்ணு. அழுதவள் வரச்சே,
வழியினிலே போட்டான்...
அவள், ஏங்கியே புலம்பித் தாங்கியே எடுத்தாள்;
தன், மைந்தனைக்காணாமல் மதனவல்லியும் புலம்ப
காசி மகர்ராஜன்—அந்தக்—கள்ளரையும் புடிக்கத்
தூதர்களை விட்டான். (தூதர்களும் ஓடி)
எழுபதியால் ஒண்ணு. ஏந்திழையைக் கொண்டு
ராஜன்முன்னே விட்டார்; அவள், வாக்குகளைக் கேட்டார்.
குழந்தைகள் இருக்க—நான்—இல்லைஎன்றால் போமோ?
மயானம் கொண்டுநீங்கள் வீரபாகன் கையால்
சிரந்துணித்து வாரும்; எண்பதியால் ஒண்ணு.
ஏந்திழையை வெட்டிச் சேதியினை அனுப்பும்;
சந்திர மதியைத் தலைகுனியச் சொல்லிச்
சந்திரவா ளாலே தாங்கியவன் ஓங்க
வான்வளரும் தேவர் வந்துகை புடிக்க
என்றன்கை புடிச்ச ஈசனே, சரணம்;
தொண்ணூறுடன் ஒண்ணு.

உன், துன்பமெல்லாம் போச்சே!—உன்—சீமையுனக் காச்சே!
சத்தியம் உனக்கே தரணியரிச் சந்த்ரா,
ஒரு, பொய்சொல்ல மாட்டாமல் பெண்டுபுள்ளை வித்தாய்;

நீ, புலையனுக் கமர்ந்தாய்; வாய்க்கரிசி தின்னுய்.
இந்த, ராச்சியமே ஆண்டால் நாடுநகை யாதோ?
ஆனகுறை சேரும்; வாரும்அரிச் சந்திரா,
உன்னை, வாங்கினவன் ஏமன். மாண்டுபோன புள்ளை
கலகலென் றெழுந்தான்; களிப்புமிகக் கொண்டார்.
ஈசுவரனும் அம்மன் இந்திரனும் தேவர்
மாயவனும் அம்மன் வசிஷ்டமா முனியும்
அயோத்தியே சென்று அரிச்சந்த்ர ராஜனுக்கும்
சந்திர மதிக்கும் சகலரும் பார்க்கப்
பட்டமே தரிச்சார்; பாரெல்லாம் அளிச்சார்;
மங்களமே பாடி வாழ்த்திச்சேஷை இட்டார்.
சோபனமே பாடித் தெய்வலோகம் போனர்.
இந்தக்கதை கேட்டோர் எல்லாநலம் கொண்டு
பஞ்சபூதம் ஒன்ருய்த் தஞ்சமுடன் வாழ்வார்.

---

# ஏற்றப் பாட்டு

## [ வேறு ]

பிள்ளையாரே வாரும், பிழைவராமல் காரும்;
பிழைவராமல் காரும்; மழைவரக்கண் பாரும்;
மகாதேவா வாரும்; மழைவரக்கண் பாரும்;
மழைவரக்கண் பாரும்- எங்கள்- மூவரையும் காரும்;
மூவரையும் காத்துநீர் முன்நடக்க வேணும்.
முன்நடந்தி ராஞல் கண்ணடக்கம் பொன்னு,
கண்ணடக்கம் பொன்னு, கைக்குவெள்ளிக் காப்பு,
மாருக்கு நிறைந்த மணிப்பதக்க மாலை,
துளசிதிரு மாலை, உனக்கேபெரு மாளே.
ராமரைநான் பாட ரெண்டுடனே வாரீர்;
ரெண்டுடனே வாரும்; மூணுடனே வாரும்;
மூணுடனே வாரும், நாலுடனே வாரும்;
நாலுடனே வாரும், நாகமே சரணம்.
நாகமே சரணம், பாதமே கதியே;
ஆறுடனே ராமா, ஏழுடனே ராமா,
ஏழுடனே ராமா, எட்டுடனே ராமா,
எட்டுடனே ராமா, எட்டுமோஎட் டாதோ?
எட்டுமோஎட் டாதோ, இளங்கொடிக்கு மாலை;
பற்றுமோபற் ருதோ, பைங்கிளிக்கு மாலை?
ஓடிவர வேணும், உலகளந்த மாயா.
ஒருபதியால் ஒண்ணு, ஒருபதியால் ரெண்டு,
ஒருபதியால் மூணு, ஒருபதியால் நாலு.

ஓடுதே உருண்டு காலாழி கழன்று;
ஒருபதியா லாறு, ஒருபதியால் ஏழு,
ஒருபதியா லேழு, ஒருபதியால் எட்டு.
ஓடவிட்டான் தேரை, விராடபட்ட ணத்தே;
இடுவஞ்சனை சூது ரெண்டும்உத வாது;

இலங்கைரா வணனை ஏதுவதை செய்தார்?
இலங்கையைக் கொளுத்தித் திரும்பினர் அயோத்தி.
இருபதியால் ஒண் ணு, இருபதியால் ரெண்டு,
இருபதியால் மூ ணு, இருபதியால் நாலு.
இடியும்பெருங் காத்தும் மழையும்வரக் கண்டேன்;
இருபதியா லாறு, இருபதியா லேழு,
இருபதியா லேழு, இருபதியா லெட்டு.
இந்திரன் சபைக்குப் பஞ்சவர் நடந்தார்;
முருகருக்கே வள்ளி மோகனப்பொண் ஆனுள்;
கந்தருக்கே வள்ளி கல்யாணப்பொண் ஆனுள்;
முருகர்சந்நி திக்கே வருவார்லட்சம் கோடி;
முப்பதியால் ஒண் ணு, முப்ப தியால் ரெண்டு,
முப்பதியால் மூ ணு, முப்பதியால் நாலு.
முறுக்குச்சுட்ட எண்ணெய், கரிக்குதடா கண்ணே;
முப்பதியா லாறு, முப்பதியால் ஏழு;
முப்பதியா லேழு, முப்பதியால் எட்டு;
மோகபாணம் விட்டார்; மூலபலம் எல்லாம்
மூலபலம் சண்டை முடியும்ராமர் கையால்
நாரதர் பொறந்தார், பாரதம் நடக்க.
நாங்கநாலு பேரும் நாரதர்க் கடிமை;
நாற்பதியால் ஒண் ணு, நாற்பதியால் ரெண்டு,
நாற்பதியால் மூ ணு, நாற்பதியால் நாலு.
நாககன்னி தேரை நடத்தும்லட்சு மணனே,
நாற்பதியா லாறு, நாற்பதியா லேழு,
நாற்பதியா லேழு, நாற்பதியா லெட்டு;
நந்தன்போனுன் கா ணும், நடேசர்பாதம் காண;
நந்தனுக்கு மோட்சம் தந்தாரே நடேசர்.
அம்பிலே சமர்த்தன், அருச்சுனன் ஒருவன்;
அம்பெடுத்துப் பூட்டி அனுப்பினர் படைக்கு.
ஐம்பதியால் ஒண் ணு ...... ஐம்பதியா லாறு.
அலைகடலில் மாயன் அமிர்தம்கடைஞ் சாரே.
ஐம்பதியால் ஆறு, ஐம்பதியால் ஏழு,
ஐம்பதியால் ஏழு, ஐம்பதியால் எட்டு.

அன்னமிடப் போறேரும்; ஆண்டிகளே, வாங்க.
அந்தவண்ணு ஞலே அல்லல்பட்டாள் சீதை.
ஆறுமுகம் என்றுல் தீரும்வினை எல்லாம்.
அன்னக்கொடி கட்டி ஆண்டான்சிறுத் தொண்டன்.
அறுபதியால் ஒண் ணு, அறுபதியால் ரெண்டு,
அறுபதியால் மூ ணு, அறுபதியால் நா லு;

யாரோகள்ளன் வந்து ஊரைக்கொள்ளை யிட்டான்;
அறுபதியா லாறு, அறுபதியா லேழு,
அறுபதியா லேழு, அறுபதியால் எட்டு.

அரிச்சந்திரன் பட்ட அடிமைகளும் மெத்த.
அரிச்சந்திரன் தன்னை அடிமைகொண்டான் தோட்டி;
ஏழைபெரி யோரைத் தாழச்சொல்ல லாமோ?
இடைக்குலம் விளங்க அரிகிருஷ்ணன் பொறந்தான்.
எழுபதியால் ஒண் ணு. எழுபதியால் ரெண்டு,
ஏழுபதியால் மூ ணு, எழுபதியால் நா லு.
எழுந்தான், விழுந்தான், என்மடிமேல் சாஞ்சான்
எழுபதியா லாறு, எழுபதியா லேழு,
எழுபதியால் ஏழு, எழுபதியால் எட்டு;

ஏழைவண்ணு ஞலே சீதைவனம் போனுள்;
என்னகா ரணமோ இலங்கைபத்தி வேக?
எழுதிப்படி தம்பி, கவனிபாடம் எல்லாம்.
ஏழைக்குநான் பெண்டு; வேலைக்குநான் வல்லை.
எண்பதியால் ஒண் ணு,...எண்பதியால் நா லு.
எருதுகளில் ஏறும் ஈசுரனே வாரும்.
எண்பதியா லாறு, எண்பதியால் ஏழு,
எண்பதியால் ஏழு, எண்பதியால் எட்டு.

ஈசுவரன்தான் தெய்வம், எரிச்சான்மன் மதனை;
இடியா, மழையா, கர்ணன் கொடையா?
தோழன்பட்ட ணத்தை ஆளப்பட்ட ராஜா,
துவாரகா புரிக்குத் துரியோதனன் போனுன்.
தொண் ணூ றியால் ஒன் று, தொண் ணூ றியால் ரெண்டு,

தொண்ணூறியால் மூணு, தொண்ணூறியால் நாலு.

துஷ்டன் துச்சாதனன் துகிலுரிஞ்சான் பாவி!
தொண்ணூறியா லஞ்சு, தொண்ணூறியா லாறு,
தொண்ணூறியா லேழு, தொண்ணூறியா லெட்டு.
தொய்யப் படராது, ஐயர்ஏறும் காளை;
தூள்பரியாச் சங்கு, துதிபண்ணினரே மாயன்;
தொடுவாயடா என்னை; அறிவாயடா சேதி;
தொண்ணூறும் பத்தும் சென்னுதையா நூறு

— ——

# ஸ்ரீ ராமர் ஏற்றப் பாட்டு

பிள்ளையாரே வாரும், பெருமாளே வாரும்;
வாணி சரஸ்வதி வந்தருள வேணும்.
மாயன்பெரு மாளே, என், மனசில்நிற்க வேணும்;
முப்பத்துமுக் கோடி (தேவர்களே சரணம்);
நாற்பத்தெண் ணாயிரம் ரிஷிகளே சரணம்;
ஸ்ரீராமர் கதைபாட வந்தருள வேணும்.
எட்டுடனே வாரீர். ராக்ஷசாள் பயத்தால்
தேவர்கள் பயந்து ஜெபதபம் விட்டுக்
கைலைமலை வாழும் கர்த்தருடன் சொன்னார்;
ராக்ஷசா ளுடைய துன்பமது வெல்லாம்
பாங்குடனே சொல்லச் சபையதுதான் கூடி
யோசனைகள் செய்து, வானரங்க ளாலும்
மானிடவ ராலும் தான்மடிய வேணும்.
மாயவர் உரைக்கத் தேவரெல்லாம் கூடி
வானரங்கள் ஆனார். (வனத்துக்குப் போனார்).
சதுமுகனார் தாமே சாம்பவனு மானார்;
தேவேந்திரன் தானும் வாலியவ னானான்;
சூரியன் தானும் சுக்ரீவன் ஆனான்;
எமதர்ம ராஜன் அங்கதனு மானான்;
ஆதிசிவன் தானும் அனுமாராய் வந்தார்;
அக்கினி தேவனும் நீலனாகி வந்தான்;
இவ்வித மாக இந்தஉல கத்தில்
சங்குசக்க ரங்கள் பரதசத்து ருக்னராய்
ஆதிசேஷன் தானும் லக்ஷ்மணனு மானார்;
ஆதிவிஷ்ணு தாமும் ராமராய்ப் பொறந்தார்;
தசரதர் வயிற்றில் நால்வரும் வருக;
இவ்விதம் வருவோம், தேவர், இடையூறு நீங்க;
அஞ்சவேண்டாம் என்று அபயஹஸ்தம் தந்தார்;
தசரதரும் அப்போ புத்ரகா மேஷ்டி
யாகமது செய்ய, அதில், ஓமபிண்ட மாக

வந்துமே பொறக்க, அதை, கோசலை சுமித்ரை
கைகேயிக்கும்ஈய அவர்கள்கெர்ப்ப மாகி
ராமர் லக்ஷ்மணர் பரதர் சத்ருக்னர்
நால்வராய்ப் பொறக்கத் தசரதர் கண்டு
மனமகிழ்ச்சி கொண்டு வசிஷ்டகுரு வாலே
நாமகரணம் செய்து சகலவித்தை தன்னை
தாம்கற் றுணர்ந்தார், அப்போ, கௌசிக முனியும்
தசரதரைக் கண்டு, ராமரைத் தருவாய்,
என்றுமுனி கேட்கப் பொண்அவனைக் கொல்ல
ராமனேதுக் கையா? நான்அவனைக் கொல்வேன்.
என்று, தசரதரும் சொல்லக் கவுசிகரும் அப்போ
கனத்தகோபம் கொள்ள, வசிஷ்டமுனி வந்து,
தடையின்றியே நீரும் ராமரை அனுப்பும்;
என்றுகுரு சொல்ல ராமலக்ஷ் மணரை
முனியுடன் அனுப்ப, மூவருமாய்க் கூடி
யாகசாலை வந்து வேள்வியை நடத்தத்
தாடகையாள் வந்து வேள்விதனில் அப்போ
கோமயத்தைப் பெய்து வேள்வியை அவிக்க,
ராமரவர் தாமும் தாடகையைக் கொன்று,
சுபாகுமா ரீசனைச் சிக்ஷைய‌து செய்து,
அகலிகையாள் சாபம் அன்புடனே தீர்த்து,
மிதிலைநகர் வந்து மூவரும் சேர்ந்து
சனகரைக் கண்டு வில்லையும் வளைச்சு
வேடிக்கைகள் செய்து ரெண்டுதுண்ட மாக
வில்லும் ஒடிய வீசியே எறிஞ்சு
சீதைமணம் செய்து தம்பிமூவ ருக்கும்
தாம்மணம்செய்தாரே. ஒருபதியால் எட்டு.
வருகும்வழி தன்னில் பரசுராமர் கெர்வம்
பங்கமும் படுத்தி வில்லையும் பறிச்சு
வருணன், அடைக்கலமா வச்சுப் பரசுராமர் தன்னைத்
தபசுதான் செய்யத் தானுமே அனுப்பி
அயோத்திநகர் வந்து அரமனை புகுந்து

வாழ்மனை புகுந்து வாழ்ந்திருக்கும் போது
சூடரும் மகுடமுடி மண்பூமி யாளத்
தேசமெங்கும் விட்ட சேதியை அறிந்து
பாவிகூனி யாளும் பழையநாள் பகையைப்
பாவிஅவள் எண்ணிக் கைகேசியாள் தன்னைக்
கலைத்துமே கெடுக்க அப்போகை கேசி
முன்கொள்வரம் ரெண்டும் தாருமென்று வாங்கிக்
காடாள ராமர், நாடாளப் பரதர்,
கைகேசியாள் சொல்லத் தக்ஷணமே ராமர்
தாமதை அறிஞ்சு சடைமுடி தரிச்சுத்
தம்பிலெக்ஷ் மணரும் சீதையம்மன் தானும்
மூவராகக் கூடிப் போனார், சித்ர கூடம்,
பதினாலு வருஷம் பாரவனம் இருக்க.
அவ்விதம் அறிஞ்சு தசரதரும் அப்போ
வைகுண்டம் அடைஞ்சார்--அதைப்-பரதனுக் கெழுத
அவன்-ஒட்டமாக வந்து தந்தையை எடுத்துத்
தானடக்கம் செய்து ராமரையும் தேடிக்
குகன்தனையும் கண்டு ஓடமது தாண்டி
ராமரைக் கண்டு சங்கதி உரைத்து
ஐயன்தாளில் விழ்ந்து அடிபணிஞ்சு நிற்க,
வசிஷ்டமுனி யாலே தந்தை தனக்குக்
கிரியையாவும் செய்து பரதனுக்குத் தானும்
பாதுகை கொடுத்து மகுடமுடி ஆள
அரசினைத் தந்து அருளதனை அருளி
அவ்வனம் கடந்து அப்புறம் நடக்க,
காகாசுரன் தன்னைக் கண்ணையும் புடுங்கி
இருவிழி தனிலும் ஒருமணிய தாக
அபயமது தந்து விராதனையும் கொன்று
மோக்ஷம தளித்து அப்புறம் நடந்து
அத்திரிமுனி தன்னை அன்புடனே கண்டு
அப்புறம் நடந்து தண்டக வனத்து,
ரிஷிகள் தமைக் கண்டு அபயஹஸ்தம் குடுத்து

ஆசீர்வாதம் பெத்துப் பஞ்சவடி தவத்துப்
பர்ணசாலை கட்டிப் பாங்குடன் இருக்க,
இருக்குமந்த நாளில் சூர்ப்பனகை யாளும்,
ஸ்ரீராமரைக் கண்டு மோகமுடன் கேட்க,
ஸ்ரீராமரும் அப்போ சீதையாள் இருக்க,
உன்னைநான் விரும்பேன் என்றுசொன்ன போது
சூர்ப்பனகை யாளும் கலவாதுகள் செய்ய,
தம்பிலக்ஷ்மணனைத் தானுமே விடுந்து
மூக்குமுலை தன்னைத் தம்பியும் அரியச்
சூர்ப்பனகை யாளும் கரதூஷணு ளண்டைப்
படுகலகம் மூட்டிப் பட்டபாடு கேளாய்;
ராமலக்ஷ்மணரும் அவர்களை அடுத்து,
மோகமது கொண்டேன்; தம்பியை விடுத்தார்;
தம்பியை விடுத்து மூக்குமுலை ரெண்டும்
வாளாலே அறுத்து [வடிவுபங்கம் பண்ணி]க்
கழுத்தையும் புடிச்சுக் கடக்கத்தள்ளி விட்டார்;
முன்னேபோய் வருவேனே என்றுமே அழுதாள்.
கரதூஷணுள் தாமும் சேனையுடன் வந்து
ஸ்ரீராமரை எதிர்க்க—ஐயன்—கோதண்டம் வளைச்சு
ஒருகணை விடுத்துச் சேனைகளை எல்லாம்
கண்டதுண்ட மாக்க, கால்போனவர் சிலபேர்;
தலைபோனவர் சிலபேர்; முண்டமானர் சிலபேர்;
முண்டத்தை எடுத்து மோதுவார் சிலபேர்;
தண்ணிதண்ணி என்று தவிப்பார்கள் சிலபேர்;
இவ்வித மாகச் சேனைகளை எல்லாம்
ரத்தவெள்ளம் ஆக்கி—அவன்—தம்பிமாரைத் தானும்
சிரசையும் அறுத்துக் கரதூஷணுள் தம்மைக்
கண்டதுண்டம் செய்து, பஞ்சவடி வந்து,
தங்கியே இருக்கச் சூர்ப்பனகை யாளும்
லங்கைநகர் ஆளும் ராவணன் இடத்தில்
வந்துமேதான் நின்று புலம்பியே அழுதாள்;
ராவணனும் கேட்டு மாரீசன் தன்னை

வாவென அழைச்சுப் பெண்ணுருமானகப்
போகவென்று சொல்ல, மாரீசனும் அப்போ,
என்னபுத்தி போடா, ராவணு உனக்கு?
யாகசாலே தன்னில் ஏமன்போல வந்து
அன்னேயுமே கொன்றுன்; சுவாகுவையும் கொன்றுன்;
என்றுசொன்ன போது, நீ, போகாவிடில் உன்னே
வேல்அஸ்திரத்தினலே கொன்றுமே விடுவேன்,
என்றுராவணன் சொல்ல—அப்போ—மான்வடிவ மாக
மாரீசனும் அப்போ சிதைவிழி முன்னே
தானும்வந்து நிற்கச் சிதையம்மன் தானும்
ஸ்ரீராமரிடம் வந்து—இம்—மானெனக்கு வேணும்;
புடிச்சுமே தருவீர், [என்றுசொன்ன போது]
தம்பிலெட்சு மணரும், பொன்உரு மான்அல்ல;
என்றுசொன்ன போது, தம்பி, சிதையாளேக் காரும்;
என்றுசொல்ல ராமர் [உடனே எழுந்து]
மானின்பின் தொடர மாய்கையதனலே
ஒருகாட்டில் இருக்கக் கோபமது கொண்டு
ஒருகணே தொடுத்து மாரிசனேக் கொன்றுர்;
அவன், லெட்சுமணு என்று அபயமது கூற
அவ்விசேஷம் கேட்டுச் சிதையம்மன் தானும்,
(தம்பி) அண்ணன்ராமருக்கு அபாயம்வந்ததாலே,
அறிக்கையிட்டார் தம்பி; துரிதமுடன் ஓடித்
தெரிந்துமே வருவாய் என்றுசொன்ன போது,
தம்பிலட்சு மணரும் அண்ணனேத் தேடிப்
பின்தொடர்ந்து போனுர். ராவணனும் அப்போ
பாதாளத்தில் தேரைப் பதுக்கியே வச்சுச்
சந்நியாசி யாகப் பிட்சைஎன்று வந்தான்.
பத்தடி அளந்து பிட்சையும் எடுத்துத்
திருவோட்டில் அளிக்கத் தன்கையில் என்னஎன்று
ராவணனும் கேட்க, ஒருகையில் சங்கு
ஒருகையில் ஓடு, ஓடுமென்ற போது,
பாவிராவணனும் பர்ண சாலேயைப்

பேர்த்துத்தேரில் இட்டு ஓடினான் இலங்கை.
சடாயுராஜன் கண்டு கனத்தசண்டை செய்ய
அவன்இறகை வெட்டி அங்கேயே போட்டு
இலங்கைமூதூர் வந்து [எழில்மிகுந்த சோலை]
அசோகவனந் தன்னில் அருஞ்சிறையில் வச்சான்;
திரிசடையாள் தன்னைக் காவல்அங்கே வச்சான்.
ராமர்லட்சுமணரும் இருவரும் கலந்து
பத்தினி சீதையைப் பஞ்சவடி தன்னில்
காணாத படியால் தேடிப்புறப் பட்டார்.
சீதையாளைப் பார்த்த சடாயுகிடக்கக் கண்டு
சீதை—சேதியும் தெரிஞ்சு அவரைத்தகனம் செய்து
கடனது கழிச்சுச் சபரியிடம் போயி
எச்சில்கனி தின்னு சங்கதி தெரிஞ்சு,
கிஷ்கிந்தையில் வந்து வாலியையும் கொன்று
சுக்ரீவனின் கஷ்டம் தம்பியால் அழித்துத்
துந்துபி எலும்பைத் தானுமே எறிந்து
மராமரங்கள் ஏழையும் ஒருகணை விடுத்துத்
தானும்விழச் செய்து, வாலியவன் தானும்
வருந்திய போதுதான் என்மேலே விட்டதோர்
பாணமது தன்னைத் தம்பிமேல் விடாதே;
ராகவா சரணம், பொற்பாதம் சரணம்,
என்று, வாலியும் துதிக்க மாலியவந்த மலையில்
மழைநாளது தங்கித் தம்பியை அழைச்சு,
இன்னம்வர வில்லை, சுக்ரீவன் தானும்,
தம்பிநீ அறிஞ்சுவராய்; சொன்னமொழி தன்னைச்
சுக்ரீவ னிடத்தில் தானுமே சொல்ல,
அவன், சேனைக ளுடனே தானும்புறப் பட்டுச்
சீதையைத் தேட அனுமாரை விடுத்து
நாலுபக்கம் தேடக் குரங்குச்சேனை விடுத்துத்
தென்திசைக்கு அனுமார்—ராமர்—மோதிரம்கைப் பற்றிச்
சம்பாதியைக் கண்டு சங்கதி தெரிஞ்சு

மயேந்திரமலை ஏறி விச்வரூபம் கொண்டு
இலங்கைமூதூர் தன்னை நாடியேதான் போக,
மைநாகனைக் கண்டு, சுரதையாள் தனையும்,
குடலைப் புடுங்கி, லங்கிணியாள் தன்னை
ஒருஅறையினாலே அவள் தனையும் கொன்று
அசோகவனந் தன்னில் சீதையைக் கண்டு
ஆனந்தம் கொண்டு ராமராம என்று
துதியினைச் செய்ய ராவணனும் அப்போ
சீதையம்மன் முன்னே கொஞ்சிக்கெஞ்சிக் கேட்க,
ராக்ஷசப் பதரே, துன்மார்க்க வார்த்தை
ஏற்குமோடா? போடாநீ என்றுசொன்ன போது
அவன்-இலங்கைநகர் சேர ராக்ஷசிகள் எல்லாம்
தாமுறங்கி விட்டார்; அந்தச்சமயத்தில்
கணையாழியைத் தானும் சீதைமுன்னே வச்சுச்
சங்கதியைச் சொல்ல-ராமர்-கணையாழியைக் கண்டு
கையினால் எடுத்துக் கண்ணிலே ஒத்தி
மன்னன்ராமருக்குத் தெண்டனது இட்டாள்;
சொன்னமொழி கேட்டுச் சூடாமணி வாங்கிக்
கையிலே புடிச்சு அசோகவனம் தன்னை
வேர்களைப் புடுங்க, அக்ஷயன் தடுக்க
அவன்தனையும் கொன்று இந்த்ரஜித்தன் தன்னை
மண்டை கலங்க அவன்தன்னை அடிக்கஅவன்
பிரம்மாஸ்திரம் விட்டு அனுமாரையும் கட்டி
ராவணன்முன் விட்டான்; வாலதை வளர்த்து
மேல்இருந்தார் அனுமார்; ஆரடா குரங்கே,
என்று-காவலர்கள் கேடக, ராமஸ்வாமி தூதன்
என்றுசொன்ன போது சீதைதனைத் தேடி
இங்குவந் தேனடா; உன்றனைக் காணவே
வந்தேனடா நானும் என்றுசொல்லக் கேட்டு
இவரைவெட்ட வந்தான்; தூதரைக் கொல்வது
ஞாயமல்லவென்று விபீஷணன் தடுக்க
அனுமாருடை வாலில் கந்தைகளைச் சுத்தி

எண்ணெய்களை வார்த்து அக்கினியை மூட்டி
அப்புறம்போ என்ன,
அந்தச்சேதி தன்னைச் சீதையாள் அறிந்து,
அக்கினி தேவனே, அனுமானை நீயும்
வருத்தவேண்டாம் என்றாள்; அனுமாரவர் தாமும்
இலங்கைநகர் எல்லாம் தாமுமே கொளுத்திச்
சீதையினைக் கண்டு செலவுபெற்றுக் கொண்டு
ஸ்ரீராமரிடம் வந்து, சீதையாரைக் கண்டேன்;
இலங்கைமூதூரில் இருக்கிறாளே தாயார்;
என்றுசொன்ன போது இராமரவர் கேட்டுச்
சேனையை நடத்திச் சேதுபந்தனங்கள்
வருணனை அழைச்சு வாராவதி கட்டி
வெள்ளியங் கிரியில் தங்கியே இருக்க
இராவணன் தானும் விச்வகர்மா வாலே
அரமனைகள் செய்து தானுமங் கிருக்க,
யோசனையும் கேட்க, அவரவர் பலங்கள்
அறியவே உரைக்கக் கும்ப கர்ணனும்
புத்தியது சொல்லித் தூங்கினான்; அப்போது
விபீஷணன்* புத்தி தான்எடுத்துச் சொல்ல
அவனை-உதாசினங்கள் சொல்ல-உன்-உடன் பொறந்த
பாவம்
ஒழிந்ததென்று சொல்லி எழுந்துமே நடந்து
ஸ்ரீராமரைக் கண்டு வந்தனந்தான் செய்து,
நம்பின என்னையும் காருமையா என்றான்;
கலங்கியே பணிந்தான்; இலங்கைநகர் தன்னில்
கண்டஅனு மாரும் ராமருக்குச் சொல்லி
விபீஷணன் தனக்குச் சிரஞ்சீவிய தாக
இலங்கைநகர் தன்னை ஆட்சிசெயக் கொடுக்கப்
பருத்தமணி மாலை வைத்துமே பணிந்தான்;
வானராள் தமக்கு வீடுகளைக் காட்டித்
தானுமே கொடுத்தான்; ராவணன் தூதர்

(பா-ம்) *விபூஷணன்.

சுகசாரணுள் வந்து தளந்தனில் திரிய
அவர்களையும் கட்டி ராமர்முன்னே விட்டான்;
தூதனைஅறிந்து சொன்னுர்ஸ்ரீ ராமர்:
சுகசாரணரே நீர்போய்ச் சொல்லுங்கள் போகி;
மூத்தமகனும் பின்பு வாய்த்த மகனும் மடுக்கச்
சுரேந்திரனும் படையும் அண்டையில் இருக்கவும்
மண்டுகளத் திருக்கச் சண்டையிலே கொடிய
சூற்றுவன்கைக் கொள்ளத் தூற்றிவிடுவேன் என்று,
சொன்னசொல்லைக் கேட்டுச் சுகசாரணர் ஓடி
ராவண னுடனே தாம்எடுத் துரைக்க
உத்தர கோபுர உச்சியிலே ஏறிச்
சாரணரும் காட்ட ராவணனும் பார்க்க
விபீஷணனும் அப்போ பாரும்சுவாமி என்று
ராவணனைக் காட்ட அதுவழிய தாகச்
சுக்ரீவன் எழுந்து ராவணன்மேல் பாய்ந்து
மருடம்பத்தும்தூக்கி ராமர்பாதம் தன்னில்
சுக்ரீவனும் வச்சுப் பாதமே பணிந்தான்;
இலங்கைநகர் தன்னை நாலுபக்கம் சூழ்ந்து
வளைத்துக் கொண்டு ராமர் சங்கதி அறிந்து
அங்கதன்தனையும் தூதாக விடுத்துச்
சங்கதி தெரிந்து உன்னைப்பிள்ளை யாகத்
தெய்வம்எனக் கென்று பட்டமும் தரித்து
உன்-தகப்பன்பழி தீர்ப்பேன்; அங்கதனே வாநீ;
என்றசொல்லைக் கேட்டு-அட-ராவணனேநீ நாளை
ராமருட பாணம் உன்றனையும் கொல்லும்.
அங்கதனும் சொல்ல, ராவணன்கோ பிச்சுத்
தூதர்களை விட்டுக் கட்டுமென்று சொல்லத்
தூதரை அடிச்சு ராமரண்டை வந்து
சண்டையே அல்லாது-சுவாமி-குணபக்ஷம்ஏ தையா?
என்றுசொன்ன போது இலங்கையில் புகுந்து
சண்டையது செய்தார். அறுபதியால் ஒன்னு.
வானரர்ள் இலங்கையை வளைச்சுச்சண்டை செய்ய

ராவணனும் வந்து அனுமாரை அடிக்கக்
களைத்துமே இருக்க லக்ஷ்மணரும் வந்து
ராவண னுடனே சண்டையது செய்து
மூர்ச்சையது வானுர்; களைதெளிந் தனுமார்
திசைமுகனைக் குத்த அவன்கலங்கித் தேறி;
அறுபதியால் எட்டு; அனுமாருடை தோளில்
ராமரவர் ஏறி ராவண னுடனே
வேணசண்டை செய்து ஒண்டியாகச் செய்து,
ஏதடா, ராவணு, என்னடா சம்மதமா?
ஒண்டியாய் நின்ருய்; சீதைதனை விட்டால்
பிழைப்பாயேடா நீயும்; இல்லாவிட்டால் போய்நீ,
நாளைவாடா துரோகி, என்றுசொன்ன போது
வெறுங்கையுடன் ஓடி இலங்கைநகர் சேர்ந்து
மாலியவா னேடே தானுமே அழுகச்
சீதைதனை விட்டு நீபிழைப்பாய் என்ருன்:
இதைமகோ தரனும் கும்பகர்ணன் தன்னை
எழுப்புமென்று சொல்ல, நித்திரை பங்கமாய்
அவனுமே எழுந்து வானர சேனையைக்
கும்பகர்ணன் கேட்டுப் புலஸ்தியன் குலமும்
போய்மடிய லாச்சு; சுவாமிபதம் சேர்வேன்.
தம்பிகும்ப கர்ணன் சண்டைசெய்ய வந்தான்;
ஸ்ரீராமரு மப்போ விபீஷணன்தன் னுலே
கும்பகர்ணன் தன்னை அறிந்துவாரும் என்ருர்;
தக்ஷணமே போகக் கும்பகர்ணன் தானும்
விபீஷணன் தனக்குப் புத்திகள் உரைத்து
சண்டையது செய்யச் சுவாமியுடன் செல்லும்;
தம்பியென்று சொல்லிச் சண்டையது செய்தான்;
சுக்கிரீவன் சேனையைக் கசக்கிப் பிழியக்
கும்பகர்ணன் சூலம் தம்பிமேலே விட்டான்;
தடுத்துமேசுக் ரீவன் காதுமூக்கு ரெண்டும்
தறித்துப்பின்னம் செய்யப் பங்கம் வராமலே
தன்தலையை மறைக்க ஸ்ரீராமரைத் துதிச்சு

ஐயன்ஒரு கணைவிட்டு அவன்தலையை வெட்டக்
கும்பகர்ணன் சேதி ராவணன் அறிந்து
மெத்தவும் அழுதான்; அதிகாயன் படையும்
அனுமாருந்தான் கண்டு மரங்கள் தனைக் கொண்டு
அவன் றனையும் கொன்ருன்; லக்ஷ்மணரும் அப்போ
அங்கதன்மேல் ஏறி அதிகாயனைக் கொன்ருன்;
இந்திரசித்தன் தானும் ரதுமதுதான் ஏறி
வானரங்கள் தம்மைத் தானுமே சிதைக்க
லக்ஷ்மணர் எதிர்க்கப் பெருஞ்சண்டைகள் செய்ய
நாகாஸ்திரம் விட்டுச் சேனையையும் கொல்ல,
ராமருந்தான் அப்போ தம்பியர் இரங்கத்
தெய்வக்கருடன் வந்து நாகபாசம் விட்டு
அனைவரும் பிழைக்கத் தானுமே எழுந்தார்.
எழுபதியால் எட்டு. எழுந்திருந்த சேதி
இந்த்ரசித்தன் கேட்டு அகம்பன்வந்து நிற்க,
அனுமந்தர் அடிச்சார்; இந்த்ரஜித்தன் அப்போ
பிரம்மாஸ்திரம் விட்டான்; தம்பிமூர்ச்சை ஆனர்;
ஸ்ரீராமரும் அறிந்து மெய்ம்மறந்து நின்ருர்;
சஞ்சிவி மலையைக் கொண்டுவந்து சேர்க்கச்
செத்தவர் பிழைச்சார்; சற்றுநேரம் தன்னில்.
ஜானகியைப் போல மாயாசிதை செய்து,
அனுமாரின் முன்னே வாளினலே வெட்டி
அயோத்தியில் சென்று, அனைவரையும் கொல்வேன்;
உரத்தனுமானேடே உபாயமது செய்தான்;
தாயார் இறந்தாளென்று தைரியமும் விட்டு
ராமரது கேட்டு விசனமது கொள்ள
லக்ஷ்மண ருடைய வசனமது தன்னல்
தேறிரகு ராமர் தந்திரங்கள் எல்லாம்
கண்டுவாரே னென்று வண்டாய்ரூபம் கொண்டு
விபிஷணர் எழுந்து தாயார்சிதை தன்னை
வனத்தினில் இருக்கப் பாவி நிகும்பலை
யாகம்செய்யப் போனன்; வேள்வியது முடிஞ்சால்
வெல்லமுடியாது, என்று, விபீஷணர் உரைக்க

ஸ்ரீராமருந்தான் கேட்டுத் தம்பி லக்ஷ்மணா நீபோய்
இந்த்ரஜித்த னுடைய தலைதனைக் கொண்டுவா;
மயான பூமியர்க்கு எமவாதனை செய்து
இந்த்ரஜித்தன் தோற்று (எவரும் அறியாமல்)
இலங்கைவந்து சேர்ந்து இராவணனைக் கண்டு,
இனியென்னால் சண்டை செய்யஆகா தையா என்றான்;
இன்னம்போனால் நானும் இங்குவர மாட்டேன்;
இராவணனும் சிற இந்த்ரஜித்தன் எழுந்து
சாவேனென்று சொல்லி ரணகளமே வந்தான்.
தலையதனை அறுத்து ராமர்பாதம் வைத்தார்;
லக்ஷ்மணர்அம் பாலே எமனுலகைச் சேர்ந்து
நாசமான சேதி ராவணன் அறியான்;
சீதையாள்முன் போலச் சேரும்நாளைக் கொன்றான்;
மங்கைதந்தை யோடே மாயத்தால் ஜனகன்
சீதையர்முன் னாலே தான்வர விடுக்க
அந்தச்சம யத்தில் இந்த்ரஜித் இறந்த
சேதிதனைக் கேட்டு ரணகளமே வந்து
பத்துவா யாலும் கத்தியே அழுதான்;
மூலபலந்தன்னை முடுக்கியே விடுக்க
ஸ்ரீராமருட போரில் ராவணனும் விட்டான்;
வானரங்கள் எல்லாம் பயந்துமேதான் ஓட
ஸ்ரீராமர் தாமும் சேனையை நிறுத்தித்
தாம்ஒருவ ராகப் புன்சிரிப்புக் கொண்டு
மூலபலந் தன்னை ஒருவராய் வளைந்து
கோதண்டம்கைக் கொண்டு நாணியை இழுத்து
ராமபாணம் விடவே ஒருமுகூர்த்தம் தன்னில்
கால்போனவர் சிலபேர்; கைபோனவர் சிலபேர்;
முண்டமானார் சிலபேர்; முண்டங்கள் எடுத்து
மோதுவார் சிலபேர்; வெட்டவெளி யாக்கிக்
காளிகூளி தின்னக் கழுகுகளும் கொத்த
ரத்தவெள்ள மாக்கி மோகனாஸ் திரத்தை
ராமரும் விடுத்து எங்கும்ராமர் ஆகி
அவருக்கு அவரே சாகவேதான் செய்தார்;

மூலபலம் மாண்ட சங்கதியைத் தானும்
ராவணன் அறிந்து மகோதரனை விட்டுச்
சண்டையது செய்ய ராமபாணம் பட்டு
வைகுண்டமே சேர ராவணனும் அப்போ
தேரேறி வந்து ஸ்ரீராமரை எதிர்க்க
ஸ்ரீராமரும் அப்போ தேரேறியே தாமும்
மாவலியும் தானும் இரதமது விடுக்க
ரணகளமே வந்து இருவருமதாக
எதிர்த்துச்சண்டை செய்து ராவ்ணன் வயிற்றில்
அமிர்தகலசந் தன்னை உடைத்துராமர் தாமும்
தேரையும் உடைத்துச் சாரதியைக் கொன்று
ராவணன் தனையும் (எதிர்கொண்டு நின்று)
பத்துமுடி தன்னைக் கொத்துடன் அறுத்து
வைகுண்டமே சேர, அன்று விபீஷணன்
அண்ணன்மேல் விழுந்து தானுமே புலம்பி
ஜாம்பவரால் தேறி அனுமாரை அழைத்துச்
சீதையை அழைத்து ராமர்சேவை காணச்
சமயம்அம்மா என்று அனுமார் விபீஷணரும்
அம்மனுடன் சொல்ல ஜானகி எழுந்து
சுவாமிதரிசனமே செய்யஐயன் லக்ஷ்மணனைக் கொண்டு
அக்கினியை வளர்த்து, அதில், அம்மனை விடுக்க
அம்மனும் முழுகி ராமர்முன்னில் நிற்கத்
தசரதரும் வந்து மகிழ்ச்சியது கொண்டு
வைகுண்டமே சேர ஸ்ரீராமரும் சீதையும்
லக்ஷ்மண ருடனே சேனையுடன் கூடி
ரதமதுதான் ஏறி லங்கைமூதூர் தன்னை
சீதையாள் தனக்குத் திருவணையும் காட்டி
வரும்வழியில் உள்ள சங்கதிகள் எல்லாம்
ஜானகி தனக்குக் காட்டியேதான் வந்து
பரத்துவாஜ ருடைய விருந்துமது கொள்ள
பரதனுக்குத் தானும் அனுமாரை விடுத்துத்
தம்வரவு தன்னைக் குகனுடனே சொல்லித்
தூதரனு மாரும் ராமரிடம் வந்தார்;

பரிகலத்தில் அன்னம் பாதி பகுந்தே
அந்தஅமுது தன்னை அனுமருந்தான் அப்போ
சகலசேனை யர்க்கும் விநியோகந்தான் செய்தார்;
அவ்விடமே விட்டுக் குகன்றனை அழைத்துப்
பரதனையும் கண்டு ஆதரவு செய்து
எல்லாரு மாக அயோத்திநகர் வந்து
பட்டமுந்தான் கட்டிப் பாரமுடி சூடிப்
பாரெல்லாமே ஆண்டார்; அயோத்திநகர் தன்னை
ஆண்டார்ஸ்ரீ ராமர், சிதையம்ம னுடனே;
சீராய்முடி பூண்டார்; தம்பிய ருடனே
ஆண்டுவந்தார் ராமர் மங்கள கரமாய்;
அரசுமுடி தாங்கி மன்னுமர சாண்டார்;
சென்றுதையா நூறு. வல்லபிள்ளை யார்க்கு;
காரும்ரகு ராமா, கடைக்கண்ணாலே பாரும்;
ஏழைகளைக் காரும்; எங்கள்குல ராமா .
ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரோடி
மூங்கில்போல் சுற்றி மூதண்டமாய் வாழ்வீர்;
இன்னம்ரகு ராமா, மங்களமாய் வாழ்வீர்;
வாழிரகு ராமா, மங்களமாய் வாழ்வீர்;
வாழிரகு ராமா, தீர்க்கதெண்டம் ஐயா,
ஏழைகளைக் காரும்; ஸ்ரீரகு பதியே,
தெரிந்தும்தெரி யாமல் ஏதேதுசொன் னாலும்
தப்புபிழை தன்னைத் தானுமே பொறுத்துப்
பொறுத்தருள் தருவாய்; ஆல்போலவே வாழி!
வாழி, வாழி, ராமா! வணங்கித்தெண்டம் ஐயா,
தெண்ட மையா, தெண்டம்; தேவர்க்கெல்லாம்
 தெண்டம்;
ஸ்ரீராமர் பாதம் தெண்டம்; ஸ்ரீராமர்கதை பாட
நல்லருளும் தாரும், நன்மையுடன்மங் களமாய்
வாழ்ந்தார் இராமர், வாழி வாழி வாழி!

———

# ஏற்றப் பாட்டு

( வேறு )

மாமரத்தின் கீழே ஒரு— மங்கைஉரை சொன்னுள்;
மாமரங்கள் எல்லாம் மாமாறிப் போச்சு;
பூமரத்தின்கீழே ஒரு பொண்ணுஉரை சொன்னுள்;
பூமரங்கள் எல்லாம் பூமாறிப் போச்சு;
காமரத்தின் கீழே ஒரு கன்னிஉரை சொன்னுள்;
காமரங்க ளெல்லாம் காய்மாறிப் போச்சு;
(சுவாமி) அன்பழகன் தம்பி, உன் — அம்பும் வில்லும்
எங்கே?
அம்பாளுடன் கூடி அம்பும்வில்லும் தோத்தேன்;
காரழகன் தம்பி, உன் கரும்புவில்லும் எங்கே?
(அந்தக்) கன்னியிடம் கூடிக் கரும்புவில்லும்
தோத்தேன்.
சிண்டழகன் தம்பி, உன் சிண்டும்வில்லும் எங்கே?
(என்) சிண்டும்வில்லும் அண்ணு, சிதையுடன் கூடி
சிதைமடி மேலே நான்—கூடிவிளை யாடிக்
கூடிவிளை யாடி என் சிண்டும்வில்லும் தோத்தேன்.
ஆருடையா தோட்டம்? அழகான தோட்டம்;(இது)
தருமருடை தோட்டம்;தங்கக்குலை வாழை ஐயா;
புண்யருடை தோட்டம்; பூவங்குலை வாழை ஐயா;
ஏழைவச்ச வாழை ஏணிவைக்க வாச்சே;
பஞ்சைவச்ச வாழை (சுவாமி) பந்தலிட வாச்சே;
ஏழுவெள்ளம் சேனை எழுபதியால் ஒண்ணு,

( வேறு )

மாயவனை வேண்டி [மகதேவரை வேண்டி]
ஓடிவரும் புள்ளை ஒருகாலுத் தண்டை
கைக்காப்பு வெள்ளி—அதைக் - கழற்றினவன் யாரோ?
பிள்ளையில்லாப் பாவி பிடுங்கிவச்சுக் கொண்டான்;

மக்களில்லாப் பாவி மறிச்சவிழ்த்துக் கொண்டான்;
இருடிபொண்ணே போவோம், ஒரு சரவணம் பார்க்க;
காட்டானை மேயும், அந்தக் காட்டானைச் சத்தம்,
கோட்டைக்குத்தான் கேட்கும், ஆனை அலற;
முத்தான பொன்னே, அத்தைமகன் வாறன்;
கொட்டாத மோளம், கோவில்மோளம் கொஞ்சம்;
அவன், கட்டாத தாலி, அவன், கழட்டினண்டி மாலை;
மாலைஎன்றால் மாலை, மல்லிகைப்பூச் செண்டு;
இது, யாருடைய மாலை வருவதையா மேலே;
அது, மாமனுடை மாலை, அங்கே!
தாலிஎன்றால் தாலி, அது, தங்கச்சரம் தாலி,
ஒருகாலுத் தண்டை உலகவிலை பொறுமா?
இவன், இடதுகாலுத் தண்டை ரெண்டாயிரம்
பொறுமா ?
அம்பாய பட்டு ஆம்பிளையைப் பெத்தா;
ஆம்பிள்ளைக்குப் பேரு —சிறு —வேம்புதனை வச்சாள்;
எண்ணெயைக் குறைச்சான், எண்ணெய்செக்கான் வீடு;
அது, கல்லுக்கட்டி தேசம், கடலைப் பட்டான் ஊரு;
எண்ணெய்வாங்கப் போனேன்; இளமயிலைக் காணோம்;
பாவைகொள்ளப் போன சிறு பசுங்கிளியைக்
காணோம்.
துலுக்கருட தேசம் துடியவரக் காணோம்;
ஆரடியே பொண்ணே, இது, ஆருடைய தேசம்?
இது, கள்ளருட தேசம்...
போகுதடி கொள்ளை, அந்தப், பொத்தவண்ணன் வீட்டில்;
இது, கள்ளருட சீமை, கடலைக்காரன் ஊராம்;
எம்பதடிக் கம்பம், இதை எடுத்துநட்ட டொம்பே,
அங்கே, டொம்பன்குழல் ஊதத் தும்பிகுழல் ஊத,
வந்தசனம் பார்க்க, எங்கள், தாரையங் கூத,
சில, கூர்ந்தசனம் பார்க்கக் குதுகலித்து நோக்க
நாலுலட்சம் பொண்கள் வெண்சாமரை வீச,
வேதியர் குலமாம், இக்காலத்துப் பொண்கள்;
ரெண்டுபொண்கள் கொண்டு போருளாம் வாடி.

பொன்கள் துணை போனால் போனவர்க ளுக்கு
ரெண்டுபங்கு வச்சுத் தருவாநான் கூடத்துணை போனால்,
மாயவனே வேண்டி [மகாதேவரை வேண்டி]
ஓடிவரும் புள்ளே, ஒருகாலுத் தண்டை,
கைக்காப்பு வெள்ளி, அதைக், கழற்றினவள் யாரோ?
புள்ளேயில்லாப் பாவி புடுங்கிவச்சுக் கொண்டாள்;
மக்கள் இல்லாப் பாவி — அவள் மறிச்சவிழ்த்துக் கொண்டாள்.

மூங்கில் இலே மேலே, தூங்குபனி நீரே!
தூங்குபனி நீரை, வாங்குகதி ரோனே!

[கம்பர் மீளவிட்டான் என்ற ஊரில் ஏற்றம் இறைக்கிறவன் பாடிய முதல் மூன்றடியைக் கேட்டார். அதோடு அவன் வேலே முடிந்து, போய் விட்டான். பாட்டு அரை குறையாக நின்று விட்டது. அவற்றிற்கு மேலே நாலாவது அடி தெரியாமல் விழித்த கம்பர், மறு நாள் வரை காத்திருந்து, ஏற்றம் இறைக்கும் இடம் சென்று அந்த நாலாவது அடியைத் தெரிந்து கொண்டாராம். பிறகு அந்த ஊரிலிருந்து திரும்பி விட்டாராம். அதனால் அதற்கு மீள விட்டான் என்ற பெயர் வந்ததாம். இப்படி ஒரு வரலாறு வழங்குகிறது.]

## [ வேறு ]

[ஏற்ற மரத்தில் ஏறி மிதிப்பவனும் சால் பிடித்து நீர் இறைப்பவனும் பேசிக் கொள்கிறார்கள்.]
வேலமரப் பாதையிலே- வேலேயா,
வேலேயிலே கண்இருக்கு- சுப்பையா,
வேலிஓரம் போகுதுபார்- வேலேயா,
வேட்டித்துணி போட்டிருக்கோ?- சுப்பையா,
சித்தாடை கட்டியிருக்கு- வேலேயா,
சின்னக்குட்டி போலிருக்கு- சுப்பையா,
கண்ணாடி தோற்குமடா- வேலேயா,
கண்ணேப் பறிக்குதோடா?- சுப்பையா,

கொண்டையிலே பூவிருக்கு- வேலையா,
கொளச்சுமுடி போட்டிருப்பா- சுப்பையா,
காத்தெனவே பறந்துவரா- வேலையா,
கஞ்சிகொண்டு வாராளோடா?- சுப்பையா,
கதிரரிவாள் இருக்குதடா- வேலையா,
கதிரறுக்கும் காலம்அல்ல- சுப்பையா,
ஆட்டுத்தழை அறுப்பாளடா- வேலையா,
அண்டையிலே வந்துட்டாளோ?- சுப்பையா,
அன்னம் போலே முன்னேவரா- வேலையா,
(அவ என்) அத்தைமவ ரத்தினம்டா- சுப்பையா,
(அவள்) உரிமைப் புருசனும்நீ- வேலையா,
அடுத்தமாசம் பரிசம்வைப்பேன். சுப்பையா!

[இது ஏற்றப் பாட்டு மெட்டில் இல்லை. இக் காலத்தில் யாரோ புதியதாகப் பாடியது போல் தோன்றுகிறது.]

———

# தொழில்கள்

[உழவு முதலிய பல வகையான தொழில்களில் ஈடுபடுவோர் பாடும் பாடல்கள்.]

### மா இடித்தாள்

டிங்கு டிங்காளே, மாஇடிச் சாளே,
வண்டிக் கார மாமனுக்கு ரெண்டு போட்டாளே;
எனக்கு, ஒண் ணு போட்டாளே;
அந்தாள் போனுனே; நான் காணப் போறேனே?

### உழவுப் பாட்டு

1. பத்தேரு கட்டியல்லோ ஏலேலோ
பத்தேரு பத்தாதுன் னு பக்கத்திலே ஆனைகட்டி
ஆனைகட்டிச் சேரடிக்கும் அதிகாரி பண்ணை இது.

2. எட்டேரு கட்டியல்லோ இடதுபுறம் ஆனைகட்டி
ஆனைகட்டிப் போரடிக்கும் அதிகாரி பண்ணை இது.

3. குடத்திலே பாலுகொண்டு கூடையிலே சோறு
கொண்டு, பசியாத்தி வேலைகொள்ளும் பாக்கியவான்
பண்ணை இது

4. காணிக் கரையோரம் காத்திருக்கும் பிள்ளையாரே,
காணிநட்டு நான்போறேன்; கரையேறும் பிள்ளையாரே.

5. எல்லைக் கரையோரம் இருப்பிருக்கும் பிள்ளையாரே,
எல்லைநட்டு நான்போறேன்; எழுந்துவாரும் பிள்ளையாரே!

### ஏலேலோ ஐலசா

மரத்தை நம்பி ஏலேலோ ஐலசா
பூவை நம்பி ஏலேலோ ஐலசா
பிஞ்சை நம்பி ஏலேலோ ஐலசா
காயை நம்பி ஏலேலோ ஐலசா

உன்னை நம்பி ஏலேலோ ஐலசா
வரப்பை நம்பி ஏலேலோ ஐலசா
வயலை நம்பி ஏலேலோ ஐலசா
கதிரை நம்பி ஏலேலோ ஐலசா
நெல்லை நம்பி ஏலேலோ ஐலசா
நாத்தை நம்பி ஏலேலோ ஐலசா
நடவு நட்டு ஏலேலோ ஐலசா
களமடிச்சு ஏலேலோ ஐலசா
நாத்தைக் கட்டி ஏலேலோ ஐலசா
தூக்கிக் கொண்டு ஏலேலோ ஐலசா
எஜமானன் வீடுபோகணும் ஏலேலோ ஐலசா.

## நடவுப் பாட்டு

எதிரான வீட்டிலே இலஞ்சியம்போல் பொண்இருக்காள்;
கழுதை உதடிமேலே கண்டாசைப் பட்டாரு;
நூலாலே தேராம்; நொடிமுத்தாம்; சப்பரமாம்;
சப்பரத்துக் குள்ளிருக்கும் சாதிக்காய்க் கேடயமாம்;
கேடயத்து மேலே கிளிமூக்கு வாகனமாம்;
வாகனத்தின் மேலேறி மகமாயி வாருளாம்;
அரைச்ச மஞ்சள் நிறத்தைப் பாரு;
அம்மி கொண்ட பொன்னைப் பாரு;
குளிச்ச மஞ்சள் நிறத்தைப் பாரு;—அம்பாளுக்குக்
கொண்டை கொண்ட பொன்னைப் பாரு

ஏருத தெத்தெருமைக் காரா,
ஒன், பொண்டாட்டி செத்துப் போனா; வாடா;
அவள், போனாலும் போயிப் போரா மயிலே;
நான், வல்லையின்னு சொல்லப் போறேன் குயிலே!

பிள்ளையார் கல்லாலே, பிடாரியும் கல்லாலே;
ஐயனார் ஏறிவரும் கிளிவாகனம் பொன்னாலே;
இந்திரரை நான்நோக்கி எடுத்தேன் எலைமுடிய;
சாச்சேன் சனிமூலை; உன்நாடு, உன்தேசம்;
பொன்னு விளையவேணும்; [பொருளாச்சொரியவேணும்.]
முக்கலம் பச்சரிசி, மூவாயிரம் செவ்விளநீர்,

முக்கியமாய்ப் பூஜைகொள்ளும் மூங்கிலடிப் பிள்ளையாரே,
நாற்கலம் பச்சரிசி, நாலாயிரம் செவ்விளநீர்,
நாணயமாய்ப் பூஜைகொள்ளும், நாவலடிப் பிள்ளையாரே,
வடக்கே மழைபெய்ய.வாசல்மண்ணு வறண்டோட,
வாசல் மணலிலே வார்ப்பிச்சோம் பொன்கரகம்;
தெற்கே மழைபெய்யத் தெருமண்ணு வறண்டோடத்
தெருவு மணலிலே திட்டினேம் பொன்கரகம்.

### நாற்று நடவுப் பாட்டு

1. அழகழகாச் சிந்துறது, பரமசிவன் மின்னுறது;
பொழுது சருவருது; பொன்னல்லவோ மின்னுறது?

2. சந்திரரே; சூரியரே, ஜோதி பகவானே,
இந்திரனை நோக்கியல்லோ-நான்-எடுத்தேன் இளமுடிய ?

3. செங்கல் அறுத்த புதுமையைப் பாரேன்;
சிராட்டன் போட்டபுதுப் பந்தலைப் பாரேன்;
செங்கலும் மங்காமே சேப்பும் குலுங்காமே
என்-குரலும் மங்காமே வந்திறங்கும் நாயகனே!

4. ஏத்தமான குதிரைஏறி அழகுசம்பா ஒழுங்குடனே
போர்த்தக் குடையும் பொன்னாலே ஆபரணமும்
பொழுதுவந்து நிக்கருங்க பூக்குடைக் கீழே.

### படியளக்கும் தருமர்

1. தலையை இடிக்குதடி தையலே, உன்பாதம்.
மழையும் மழைச்சாரலும் வரவிடடி இந்தப்பக்கம்.

2. ஓசந்தகரை தணிஞ்சசேலை, ஒத்தைச்சோமன் மேலே
போட்டு
நமக்குப் படியளக்கும் தருமர் வாருரிங்கே.

3. காட்டிலே கட்டைவெட்டிக் கடலோரம் ஊறப்
போட்டுக் .
காசி மகாராஜா கால்நடையாய் வரலாமோ?

4. வெள்ளை வெளுவெளுத்து வேலிமேலே
போட்டுலர்த்திச்
சோமன் துவைத்துவச்ச துரைமகனார் வாருரிங்கே.
சாத்தமுத்துப் பெரும்பறையா,
சாறளஞ்ச மாரழகா,
உருண்டை முழியழகா,
உருமாலைக் கட்டழகா,
நீ செத்துப் போனின்னு...
அவனி முழுதும்நீ அளந்த மரக்கால்
ஆர்அளக்கப் போரு?

* * *

நாங்க நாப்பது ரூவாய்ச் சாயச் சேலை
வாங்கிக் கட்டுவோம்;
நாங்க நாற்காலி மேல்ஏறி
நாத்து நடுவோம்.

* * *

தன்னனே தன்னனே தான தன்னன்னு தன்தான்.
சின்னயி, சின்னயி, நான், கப்பலுக்கே போய் வாறேன்;
கப்பலுன்னு முப்பயணம்; காத்துன்னுக் கடுங்காத்து;
அக்காடி அக்காடிநான், கப்பலுக்குப் போய் வாறேன்.

* * *

ரெண்டுநாளு நாத்த நாலைப் பாரடா தம்பீ,
என், நாத்தனு மவனே, என் நாடக சாலை,
ரெண்டாங் கணக்கெடுத்துநீ பாரடா தம்பீ,
என், நாத்தனு மவனே, என் நாடக சாலை.

களை வெட்டும் பாட்டு

அத்தைமகன் இறைக்கும் தண்ணி
அத்தனையும் பச்சைத் தண்ணி ;
ஏலேலோ பச்சைத் தண்ணி ;

என்பொறப்பு இறைக்கும் தண்ணி
இளநீரும் தானும் தண்ணி ;
ஏலேலோ இளநீர்த் தண்ணி ;
அத்தைமகன் கட்டும் வேட்டி
புதுக்கோட்டைச் சாய வேட்டி
ஏலேலோ சாய வேட்டி ;
என்பொறப்புக் கட்டும் வேட்டி
எட்டுக்கஜம் மல்லு வேட்டி
ஏலேலோ மல்லு வேட்டி.

### வயல் பார்க்க வருகிறார்

தெற்கு வடக்கா ஏரைப் பூட்டித்
தென்னலுச்சம்பா நாத்தை விட்டு
இந்திரன் என்கிற காளையும் பூட்டிச்
சந்திரன் என்கிற காளையும் பூட்டிச்
சமையறேன் என்கிற காளையும் பூட்டிப்
புழுக்கடையாம், தலைக்கடையாம்
கொட்டப் பருந்து கட்டிப் புரள
மணலிப் பாம்பு வழிமறிக்க
இத்தனை சகுனத்தி லிருந்து
வாராங்க நம்ம ஐயா, வயலு பார்க்க.

### பயிர் பார்த்து வருதல்

1. வெங்கலம் கிடுகிடென்னப் புடிச்சாளாம் வெள்ளைக் குதிரை ;
மேல்நாடு தத்தளிக்க வெள்ளைக் குதிரையெல்லாம்
வெள்ளாளச் சினிஎல்லாம் புடிச்சாரே வெள்ளைக் குதிரை.

2. எல்லாம் வல்ல குளத்தையன் தென்மதுரைப் பட்டணம்
பொன்னேரித் தண்ணி பாய்ச்சி......
பச்சைப் பல்லக்கைப் பாதையிலே இறக்கிவச்சு

முத்தான பல்லக்கை முன்னாலே இறக்கிவச்சு
எந்தளந்த நாடுபயிர் பார்த்து வராங்க ?

3. உம்பப்பட்டி ஒசந்தநாடு உறத்தநாடு காசாநாடு
கம்பந்தக்குடி தென்னம் நாடு......
பெட்டி எல்லாம் பெட்டி....
கருமானிலை தேசமெல்லாம் பயிர்பார்த்து வாராங்க;
எரைக்க எரைக்க....
சிங்கமுகப் பல்லக்கை அலங்கரிச்சு வச்சமே ;
தரித்து வச்சமே தலைவாச லில்இறக்கி.

### பருவம் பார்த்தல்

வெங்காயம் பூத்துதா? பாருங்கோடி ;
வெள்ளி முளைச்சுதா? பாருங்கோடி ;
நேத்துப் பொறந்த அத்தை புள்ளைக்கு
மீசை முளைச்சுதா பாருங்கோடி.

### நெல் அளக்க

சின்னக் களம்செதுக்கிச்
சீரகச்சம்பாக் கட்டடுக்கிச்
சீமைக்குத்தான் நெல்அளக்கச்
சீராளனைத் தேடுறேனே.
வண்ணக் களம்செதுக்கி
வாடைச்சம்பாக் கட்டடுக்கி
வண்டிக்கு நெல்அளக்க
வல்லாளனைத் தேடுறேனே.
காப்பைக் கழட்டறானும்;
கள்ளுக்கடையில் வைக்கிறானும்:
கள் இருந் தாலொரு கலயம் போடு,
கலயத் தோட நிரம்ப.
முத்துமுத் தெள்ளையும் கட்டிவிட்டான்;
அரண்மனையில் விட்டுவிட்டான்;
தேசம் திரியுறானே;
தெம்மாங்கு பாடுறானே.

### நெல்லுக் குத்துகிற பாட்டு

நெல்லுக் குத்தற பெண்ணே,
சும்மா பார்க்கிறே என்னே;—உன்
புருசன் வாரான் பின்னே—நீ
புடைச்சுப் போடடி கண்ணே!
ஆஹாங் ஊஹாங்!

### பச்சை குத்தும் பாட்டு

பச்சை குத்தலையா? அம்மே, பச்சை குத்தலையா? ஆயி,
பச்சை குத்தலையா?
ஐசா பைசா ஊசி வாங்கி நைசா உடலில் நாட்டி
வைப்பேன் (பச்சை)
ரங்குப் பச்சை, ரவிக்கைப்பச்சை, குண்டுப்பச்சை,
குளத்துப் பச்சை,
மங்கப் பச்சை, மடத்துப்பச்சை, எங்கும் இனிக்கும்
தங்கப் பச்சை,
நீயும் பச்சை, நானும் பச்சை. (பச்சை)

### படகு தள்ளும் பாட்டு

பச்சைப் பவளமடா— படகுக்குப்
பாரெங்கும் தோணுதடா;
பாலன் பிறந்தானே? [பால்வடியத் தொட்டிலிட?]
தம்பி பிறந்தானே தவனம்வந்த நாளையிலே?
நாளாகிப் போகுது; நடக்கவேணும் தென்மதுரை;
பொழுதாகிப் போகுது; போகவேணும் தென்மதுரை;
தென்மதுரை போனேமானல் தேசிகனைக் காணலாமா?
வடமதுரை போனேமானல் வளர்த்தவனைக் காணலாமா?
காணலாம் முன்னெல்லாம் கச்சலா ஏடுகட்ட;
பார்க்கலாம் முன்னெல்லாம் பால்பானை ஏடுகட்ட;
ஏடு தவருது; எழுத்தாணி கிருது;
பண்ணினவன் பாவமது, பாம்பாப் புரளுறனே!
பாம்பேரு மண்டபமோ? பத்துநிலைக் கோபுரமோ?

கோபுரத்தைக் கண்டவங்க கோடிதவம் செய்தவங்க;
சிதம்பரத்தைக் கண்டவங்க சேனதவம் செய்தவங்க;
சேனை பெருத்தவண்டா, சினம்பெருத்த ராவணங்க;
கும்பு பெருத்தவண்டா, குணம்கெட்ட ராவணங்க;
ராவணன் சேனைஎல்லாம் ராவாப் பயணமிடப்
பட்டாணி சேனைஎல்லாம் பகலாய்ப் பயணமிடப்
பயணம் பயணமடி; பத்தாவுந் தான்பயணம்;
சோங்குப் பயணமடி; சொன்னகப்பல் தான்பயணம்;
தானுடித் தள்ளாடித் தாயே, நடந்துவாடி;
நடந்தால் நடைதோணுமோ? நாணயமாய் ஊர்
தோணுமோ?
மாண்புமடம் போனாலும் மதுரை வழிதோணுமோ?
மதுரைச்சொக்க நாதன் துணை; வள்ளிமண வாளன் துணை!
வள்ளிக்கெல்லாம் வலதுக்கெல்லாம் வலையில்படும்
மீனுக்கெல்லாம்,
மீனு மிதந்தவலை, மீனாட்சி யம்மன்வலை,
கடலா மிதந்தவலை, காமாட்சி யம்மன்வலை;
அம்மணி என்தாயே, ஆதிபரா சக்தியே,
திக்கெல்லாம்கண்படைச்ச தேவிபரஞ் சோதியே,
தேவி கடலோடத் தேசமெல்லாம் கொண்டோட
மாரி கடலோட மாமாங்கம் கொண்டோடக்
கொண்டவனைக் கண்டாலும் குலையை நடுக்குதே!
வளர்த்தவனைக் கண்டாலும் அடிவயிறு நோவுதே!
நோவஉரை யாமலே நொந்தகண்ணால் பாராமலே
சாய உரையாமலே சாயந்தகண்ணால் பாராமலே
பாருக்கு ஓடித்தானு பருந்துலப்பை பேத்தெறக்கி
ஏழைஎன்று பாராமலே எடுத்துதே வாலிபங்க;
வாயிருந்தால் தேடலாமா? வாதுசொன்னால் அழிக்கலாமா?
அழுதகண்ணு சிந்தனையா அவள்போனாளாம் மூலையிலே;
மூலையிலே கள்ளைவச்சு மொந்தைக்கள்ளை வார்ப்பாளோ?
சாலையிலே கள்ளைவச்சுச் சாத்தமுதை வார்ப்பாளோ?
சாத்தங் காடாம் சடையன் குப்பம்,
தயவுண் டானல் வரச்சொல் லுங்க;

ஈச்சங் காடாம், இருண்ட சோலை
இருக்கிறான்னு வரச்சொல்லுங்க;

இருந்தால் இருக்கும் இடம்;
இருள்போனால் தங்கும் இடம்,
போனால் இருக்கும் இடம்,
பொழுதுபோனால் தங்கும் இடம்;

தங்குவேனா இங்கே? மெல்லத்
தரிப்பேனா தாயார்மனம்?

தாய்அறிவாள் புள்ளைகுணம்;
பசியறிந்து பால்தருவாள்;

பாலன் பிறந்தாண்டி,
பதினெட்டாங் தேதிக்குள்ளே;
தம்பி பிறந்தாண்டி தரணிஇந்த நாளையிலே;
நாளாகிப் போகுது; நடக்கவேணும் தென்மதுரை;
தென்னந் தெருவிலே தேரோடும் வீதியிலே
மன்னன் மகளாலே மகராசன் வீடுதேடி,
வீடுமல்ல, சோடுமல்ல; எதிராளி ஒருவன்அல்ல;
பாடுமல்ல; பறப்புமல்ல; பகையாளி ஒருவன்அல்ல;
ஒருவர் மயிர்புடிக்க ஒன்பதுபேர் வேதம்சொல்லப்
பலபேர் மயிர்புடிக்கப் பன்னெண்டுபேர் வேதம்சொல்ல
வேதப் பொருளையம்மா, விளையாடும் பார்வதியே,
பச்சைப் பொருளையம்மா, உன், பாவனையை ஆரறிவார்?
ஆரை நினைப்பேனம்மா, அளவற்ற சிந்தையிலே?
எவரை நினைப்பேனம்மா, எண்ணமிட்ட சிந்தையிலே?
எண்ணாத எண்ணமெண்ணி ஏழைமனம் குன்னுறேனே;
கல்லோடி உன்மனசு? இரங்கலையோ எள்ளளவும்?
ஆராரு காவலோ, ஆதிசத்தி உன்காவல்?
எவரெவர் காவலோ, ஏழுசக்தி உன்காவல்?

சக்தி உமையவளே, சமயம் பதினாயிரம்;
சரணம், சரணம்அம்மா, சாச்சாங்கம் நான்சரணம்;
நான்தானோ பொன்பொறந்தேன்? நாட்டிலேயும்
பொன்இலையோ?

ஒருத்திதானே பொண்பொறந்தேன்? ஊரிலேயும்
　　பொண் இல்லையோ?
பொண்ணாய்ப் பொறந்ததொல்லை போதுமடி என்றனக்கு;
எந்தஊரு? எந்தத்தேசம்? எங்கிருந்து இங்குவந்தாய்?
ஆணாய்ப் பிறந்ததில்லை; அரைஞாணும் கட்டலையோ?
கட்டிலுண்டு, காவலுண்டு—உனக்குக் —கால்பிடிக்கத்
　　தாதிஉண்டு;
உடுக்கத் துகிலுமுண்டு; செலவழிக்க ரொக்கமுண்டு;
என்னவென்று சொல்லுவனோ? எழுதுவனோ ஓலையிலே?
ஓலை கருகமணி, ஒருகழுத்துச் சங்குமணி,
பாலாக் கருகமணி, பசங்களுக்கே சங்குமணி;
சங்கு முழங்கிவரச் சங்கரனார் கோவிலிலே,
கோவிலும் தூரம்அம்மா, குழந்தைமனம் காதமம்மா,
மாளிகையும் தூரமம்மா, மைந்தன்முகம் காதமம்மா.
காகம் பறவாது; கருங்குருவி நாடாது;
சிட்டுப் பறவாது; செங்குறுமான்நாடாது;
நாடுதங்கி வாமகனே; நல்லசேதி சொல்லட்டுமா?
ஊருதங்கி வாமகனே; உற்றசேதி சொல்லட்டுமா?
ஊருக் கதிகாரி, உள்ளூரு வெள்ளாளச்சி;
வெள்ளாளப் பொண்டுகளா, விளையாடும் பார்வதியே!

———

## தூரிப் பாட்டு

குதிரை குளிப்பாட்டக் குளமுண்டோ வையகத்தே?
ஆனை குளிப்பாட்ட ஆறுமுண்டோ வையகத்தே?
வையைவள நாடாமே, நான்பொறந்த சோணுடாமே;
ஊசி வளநாடு, உத்துராஜன் சோணுடு;
உத்தரவு இல்லாமலே சித்தெறும்பு நாடாமலே
நாடுதங்கிப் போகுதே; நல்லசேதி சொல்லவேணும்;
ஊருறங்கிப் போகுதையா; உற்றசேதி சொல்லவேணும்;
சொல்கிறேன்காண் மெல்லியரே, சோதியான வாய்திறந்து;
அல்லாங்காண் மெல்லியரே, அன்னக்கிளி வாய்திறந்து;
வாயில்நல்ல புகைஎழும்ப வலதுகண்ணில் தண்ணிவரத்
தண்ணியில்லாச் சாதமையா, தளும்புதையா தயிர்சாதம்.
எண்ணெய்இல்லாப் பந்தமது எரியுதே தீபமது.

[காற்றுப் பலமாக அடிக்கும்போது வலையர் பாடும் பாட்டு.]

வேல்எடுத்து- முருகரே ஒருபுறம்- அரஹரா முருகையா,
விதவிதமாய் மயிலேறியே- அரஹரா முருகையா,
இடும்பன் (நல்லா) ஒருபுறம்- இருபுறமும் காவடியாம்:
வள்ளி (நல்லா) வலதுபுறம்- தேவானை இடதுபுறம்,
அரஹரா முருகையா,
ஈயு (நல்லா) நுழையாக் காடு- இருவேலங் காடானது,
அரஹரா முருகையா,
இல்லாண்ணே காட்டிலேயோ இருப்பாயோ
பூமியிலேயோ?
பூமியிலே அவதரிச்சுப் புண்ணியரே வந்தமர்ந்தார்;
அரஹரா முருகையா,
வந்து (நல்லா) எடுத்தார்களோ, வாடையிட்டுச்
சூழ்ந்தார்களோ? அரஹரா முருகையா,
சுத்தி நல்லா, வளைச்சார்களோ? சூழ்ந்தார்கள்
வானமெல்லாம்; அரஹரா முருகையா,

மண்மீது பாணமது மாரைப் பிளக்குதங்கே;
அரஹரா முருகையா,
தம்பியுட கைப்பாணங்கள் தலையை அறுக்குதங்கே,
அரஹரா முருகையா,
தலையில் எழுதினவன் தப்பாமே எழுதுவானே?-
அரஹரா முருகையா,
மண்டையிலே எழுதினவன் மறைச்சு எழுதுவானே?
அரஹரா முருகையா,
எழுதினவர் கண்களிலே எழுத்தாணிக் கூருமின்னல்;
அரஹரா முருகையா,
பண்ணினவன் பாவமெல்லாம் பாம்பாப் புரளுறனே;
அரஹரா முருகையா,
பாம்படிச்சு மேல்போட்டாரே, பழிகாரப் பட்டணத்தில்;
அரஹரா முருகையா,
கொடிபுடுங்கி மேல்போட்டாரோ, கொலைகாரப் பட்டணத்தில்
அரஹரா முருகையா,
அல்லிக் கொடிபுடுங்கி அண்ணுக் கயிறுதிரிச்சார்;
அரஹரா முருகையா,
வர்ணவர்ணக் காடுகளாம், வழிவழியாம் சாலைகளாம்;
அரஹரா முருகையா,
பின்னமரத்தோப்புகளாம், இளந்தோப்பாம், சாலைகளாம்;
அரஹரா முருகையா,
சாலடா உன்வயிறு, சாதிகெட்ட பண்டாரமே,
அரஹரா முருகையா,
ஏரியடா உன்வயிறு, ஏதும்கெட்ட பண்டாரமே,
அரஹரா முருகையா,
கல்லையா உன்மனசு; கரையலையா எள்ளளவும்?
அரஹரா முருகையா,
இரும்பையா உன்மனசு, இரங்கலையா எள்ளளவும்?
அரஹரா முருகையா,
எள்ளுக் கலந்திருக்கும்; இருகலமும் பச்சரிசி;
அரஹரா முருகையா,

பயறு கலந்திருக்கும்; பல்கலமும் பச்சரிசி;
அரஹரா முருகையா,
பச்சைமுத்து வாசலிலே பாக்குமரம் காவல்தானே?
அரஹரா முருகையா,
சின்னமுத்து வாசலிலே சிலுவைமரம் காவல்தானே?
அரஹரா முருகையா,
காவலுக்கு உள்ளேயோ களவுவரப் போகுது?
அரஹரா முருகையா,
எல்லைக்கு உள்ளேயோ இடருவரப் போகுது?
அரஹரா முருகையா,
போகட்டா என்தாயே? போய்வரட்டா மாரிக்கண்ணு?
அரஹரா முருகையா,
மாரி மகமாயி மகுடசொம்பு ராஜாத்தி,
அரஹரா முருகையா
குப்பத்து மாரிக்கன்னு, கொலுவில் அலங்காரி,
அரஹரா முருகையா,
அலங்காரம் படைச்சவளே, ஆணடிமை செய்தவளே,
அரஹரா முருகையா,
உன்னைவிட ஒருவரில்லை; உதவிதுணை ஆருமில்லை;
அரஹரா முருகையா,
ஆரையோ நான்நினைப்பேன் அளவற்ற சிந்தையிலே?
அரஹரா முருகையா,
எவரை நான்நினைப்பேன், எண்ணமத்த சிந்தையிலே?
அரஹரா முருகையா,
எண்ணமெல்லாம் ஒண்ணுச்சுதே! ஏழைமனம் குன்னவாச்சே,
அரஹரா முருகையா,
குன்னம்போல் கட்டைவெட்டிக் கோபுரம்போல்திவார்த்து,
அரஹரா முருகையா,
கோபுரமும் பொன்னாலேயாம்; குடவிளக்கோ முத்தாலே;
அரஹரா முருகையா,
மாமனார் பூசைபண்ணும் மணிவிளக்குப் பொன்னாலே;
அரஹரா முருகையா,

பொன்னை அளந்தவரே, பூலோகம் ஆண்டவரே,
அரஹரா முருகையா
ஆண்டவனுர் ஏறிவர ஆனைரதம் பொன்னுலே;
அரஹரா முருகையா
குட்டியாண்டி ஏறிவரக் குதிரையும் பொன்னுலே;
அரஹ்ரா முருகையா,
குதிரை குளிப்பாட்டக் குளமுண்டோ வையகத்தே?
ஆனை குளிப்பாட்ட ஆறுமுண்டோ வையகத்தே?
வையைவள நாடாமே; நான்பொறந்த சோணுடாமே?
ஊசி வளநாடு, உந்துராஜன் சோணுடு!
உத்தரவு இல்லாமலே, சித்தெறும்பு நடையிலே
நாடுதங்கிப் போகுதையா; நல்லசேதி சொல்லவேணும்;
ஊருதங்கிப் போகுதையா, உற்றசேதி சொல்லவேணும்;
சொல்கிறேன்காண் மெல்லியரே, சோதியாள வாய்திறந்து;
அல்லாங்காண் மெல்லியரே, அன்னக்கிளி வாய்திற்ந்து;
வாயில்நல்ல புகைஎழும்பக் கடைக்கண்ணுல் தண்ணிவர,
கண்ணில்நல்ல புகைஎழும்பக் கடைக்கண்ணுல்
தண்ணிவர,
தண்ணியில்லாச் சாதமையா, தளும்புதையா தயிர்சாதம்;
எண்ணெயில்லாப் பந்தமது எரியுதே திபமது.
பொன்னுன வாக்கு, போட்டாரே வாக்கு;
இதுவல்ல வாக்கு? இன்னமொரு வாக்கு:
வாக்கிலே தணிஞ்சு வாங்கடா பெரியாளு;
தோலில் தணிஞ்சு தோவும் பெரியாளு;
தோவி எடுத்தேனே, தோளாசைப் பட்டுவலே.

# சுண்ணும்பு இடிக்கிற பாட்டு

காலையிலே- என்சாமி- வந்தவங்க
காலெலும்பு நோவுதையா;- ஐலசா
விடியக்காலம்- என்சாமி- வந்தவங்க
விரல்எலும்பு- என்சாமி- நோவுதையா;- ஐலசா
தொட்டிலிலே- என்சாமி- போட்டபுள்ளை
தூக்கிப்பார்க்க- என்சாமி- நேரம்இல்லை;- ஐலசா
ஏணையிலே- என்சாமி- போட்டபுள்ளை
எடுத்துப்பார்க்க- என்சாமி- நேரம்இல்லை;- ஐலசா
ஆணுேடே- என்சாமி- பொறக்கலையோ?
ஆலமரம்- என்சாமி- வைக்கலையோ?- ஐலசா
பொண்ணுடே- என்சாமி- பொறக்கலையோ?- ஒரு
புளியமரம்- என்சாமி- வைக்கலையோ?- ஐலசா
வீதியிலே- ஏலேலோ- பொன்னம்மா- கல்லுரலு,
வீசிவீசி- ஏலேலோ- பொன்னம்மா, குழந்தையிலே,
காலுவெள்ளி மோதிரமாம், ஏலேலோ- பொன்னம்மா,
கண்ணைச் சுழற்றுதடி; ஏலேலோ பொன்னம்மா,
பாதையிலே. ஏலேலோ- பொன்னம்மா- பாலைமரம்
பளபளன்னு- ஏலேலோ- பொன்னம்மா- பாலைமரம்
பூத்திருக்கும்- ஏலேலோ- பொன்னம்மா,
மாமன்மகன்- ஏலேலோ- பொன்னம்மா,
இறைக்கும் தண்ணி- ஏலேலோ- பொன்னம்மா,
அத்தனையும்: ஏலேலோ- பொன்னம்மா, சக்கரையாம்;
கள்ளோரி- ஏலேலோ- பொன்னம்மா, மண்எடுத்து
கச்சிதமாய்- ஏலேலோ- பொன்னம்மா, மச்சுக்கட்டி
மச்சுக்குள்ளே- ஏலேலோ- பொன்னம்மா, ரெண்டுகிளி
மாருட்டம்- ஏலேலோ- பொன்னம்மா, செய்யுதடி.

( வேறு )

வண்டிகட்டி மாடுகட்டி- ஏலேலமடி ஏலம்
மீனுட்சியம்மன் கூண்டுகட்டி- ஏலேலமடி ஏலம்

கூண்டுக்குள்ளே போற போண்ணே,- ஏலேலமடி ஏலம்
கூப்பிட் டா லும் கேட்கலேயே!- ஏலேலமடி ஏலம்

* * *

சாலேயிலே ரெண்டுமரம்- ஏலேலமடி ஏலம்
சாமி துரை வச்சமரம்- ஏலேலமடி ஏலம்
எல்லோருக்கும் ஏத்தமரம்- ஏலேலமடி ஏலம்
உனக்குத்தாண்டா தூக்குமரம்- ஏலேலமடி ஏலம்
தூக்கு மரத்தண்டை- ஏலேலமடி ஏலம்
வாக்குமூலம் கேட்கருங்க- ஏலேலமடி ஏலம்

* * *

ஒருமரத்தை வெட்டி- ஏலேலமடி ஏலம்
ஒருமரத்தில் ஊஞ்சல்கட்டி- ஏலேலமடி ஏலம்
ஊஞ்சல்மேலே போகும்கிளி- ஏலேலமடி ஏலம்
அது,ஆண்கிளியோ பொண்கிளியோ- ஏலேலமடி ஏலம்
அது,ஆண் கிளியும் அல்லமச்சான்,
பொண்கிளியும் அஎலமச்சான்; ஏலேலமடி ஏலம்
தாயை மறந்தகிளி, தாய்வீட்டுக்குப் போகுங்கிளி,
ஏலேலமடி ஏலம்
காட்டாமணிக் கட்டைவெட்டி கறுப்புக்காளே ரெண்டும்
பூட்டி, ஏலேலமடி ஏலம்
சோடுபோடும் வெள்ளேக்காளே சுத்துதடி மத்தியானம்,
ஏலேலமடி ஏலம்
அறுத்துவிட்ட கம்மனுட்டி, ஆறுமாசம் புள்ளேத்தாயச்சி,
ஏலேலமடி ஏலம்
மானபங்கம் ஆகுதுன்னு மருந்துவகை தேடுருளே,
ஏலேலமடி ஏலம்
அஞ்சு பிராயத்திலேஅறியாத நாளேயிலே, ஏலேலமடிஏலம்
கொஞ்சம் பிராயத்திலே கூடினேமே ரெண்டுபேரும்,
ஏலேலமடி ஏலம்
ஆகாத காலம்வந்து ஆளுக்கொரு தேசம்போனேம்,
ஏலேலமடி ஏலம்

நாகூரு நல்லதண்ணி; நடுக்கடலில் உப்புத்தண்ணி,
ஏலேலமடி ஏலம்
கோலாரு கோபித்தண்ணி, என் குடலைப் புரட்டுதடி.,
ஏலேலமடி ஏலம்
மலைமேலே மாட்டைக் கண்டேன்; மலைக்சரிவில் கல்லைக்
கண்டேன்; ஏலேலமடி ஏலம்
செவத்தகுட்டி மாருமேலே சிலைப்பேனு மேயக்கண்டேன்,
ஏலேலமடி ஏலம்
அஞ்சுமுழம் சோமன்வாங்கி அரும்பரும்பாச் சுங்குவிட்டு,
ஏலேலமடி ஏலம்
சுங்குக்கொரு சிலைப்பேனு தொங்குதடா சின்னமச்சான்,
ஏலேலமடி ஏலம்
ஆலைக்கு மேற்காலே அழகான மணிக்கூண்டு,
ஏலேலமடி ஏலம்
மணிக்கூண்டுத் தண்ணிமொள்ள மாணிக்கமே நீவாடி,
ஏலேலமடி ஏலம்
பள்ளம் பயிரழகா, பறைச்சிறுக்கி நடையழகா
ஏலேலமடி ஏலம்
குட்டையிலே கோலமழகா,...... ஏலேலமடி ஏலம்
கள்ளுக் கடையோரம் கறுப்பன்செட்டி வீட்டோரம்,
ஏலேலமடி ஏலம்
தோசைக் கடையோரம், நான், தோத்தேனடி உன்மகனை,
ஏலேலமடி ஏலம்
கன்னங் கறுத்தபையா; கைமோதிரம் தந்தபையா,
ஏலேலமடி ஏலம்
என்உருவைக் குலைச்சபையா, உருவிக்கோடா
மோதிரத்தை,
ஏலேலமடி ஏலம்
நான்- கன்னங் கறுத்தவண்டி, கைமோதிரம் தந்தவண்டி,
ஏலேலமடி ஏலம்
பொறுமை பொறுத்தலண்டி; போகவர ஏசாதடி,
ஏலேலமடி ஏலம்

அடிச்சால் அடிபொறுப்பேன்; அண்டையிலே
வீற்றிருப்பேன்,
ஏலேலமடி ஏலம்
பிடிச்சாப் பிடிபொறுப்பேன்;பிரியமுடன் பேசியிருப்பேன்,
ஏலேலமடி ஏலம்
என்னை நினைக்காதேடா, எதிரிகடன் வாங்காதேடா,
ஏலேலமடி ஏலம்
சிங்கப்பூருக் கப்பல்வந்தால், என்னைச், சீக்கிரமாக்
கொண்டுபோகும்
ஏலேலமடி ஏலம்
ஓடுகிற ஓட்டத்திலே ஒத்தைப்பனை ஓரத்திலே,
ஏலேலமடி ஏலம்
எட்டிஒரு முத்தம்குடு, ஏறிக்கிறேன் வண்டிமேலே,
ஏலேலமடி ஏலம்.

# சுண்ணும்பு குத்தும் பாட்டு

( 2 )

எட்டடியாம் கட்டடமாம்— நானு நன்னனே
கொத்தனர் சுத்துவேலே— நானு நன்னனே
நான்உயர்ந்தது உச்சிமலே— நானு நன்னனே
ஓசந்துநின்னு உளியடிக்கும்— நானு நன்னனே
ஆசைக்குத்தான் தஞ்சாவூரு— நானு நன்னனே
ஓசைக்குத்தான் மணிக்கூண்டு— நானு நன்னனே
அழகுக்குத்தான் மாருக்கட்டு— நானு நன்னனே.

### கோரை அரித்தவள்

ஆத்திலுள்ள கோரையுன்னு அரிய வத்ததும்— சாமி,
அரிய வந்ததும்

அறியாப்புள்ளே, சிறுக்கியின்னு மிரட்ட வந்தீங்க, சாமி,
மிரட்ட வந்திங்க;

குளத்திலுள்ள கோரையுன்று கொய்ய வந்ததும்—சாமி,
கொய்ய வந்ததும்

குழந்தைப்புள்ளேத் தாச்சியுன்று அறியவே வேணும் —
சாமி, அறியவே வேணும்.

## தறிப் பாட்டு

[செங்குந்த முதலியார் வகுப்பினர் தறி நெசவு செய்யும்போது பாடும் பாட்டு இது. உற்சாக மிகுதியால் அவர்கள் பாடும் பல்வேறு பாட்டுக்களில் இங்கே உள்ளது, தறிகோலப் பள்ளம் தோண்டுவது முதல் தறி பூட்டி, பாவு ஓட்டி, இணைத்து, நெசவு செய்து முடிக்கும் வரையுள்ள பல்வேறு பகுதிகளைக் குறித்துக் கூறுவது.]

(ஓடப்பாட்டு மெட்டு)

( 1 )

கொட்டிக்கோ வடக்குமுக மாகவே நின்று;
குனிந்துமண் மீதிலே மனமும்ஒன் ருக.
வெட்டியா ணைப்பிடித்து மேல்சேரத் தூக்கி
மேலுக் கெதிராகத் தாழவே போடு;
கட்டியாகப் போகுது; வெட்டியும் பாரு;
காலரம் பானவன் மேல்விழப் போருன்;
முட்டுக் குடுத்து முழங்காலும் தூக்கி
மூச்சைப் புடிச்சொரு பாச்சலாத் தூக்கு;
கொட்டாரம் பண்ணுதே, கெட்டியாத் தூக்கு;
ஓசந்தா அரைமட்டம் நெறைஞ்சதா பாரு;
சட்டமா நீர்சொன்ன படியுமே ஆச்சு;
தண்ணீர் மொண்டுவரச் சென்றதே கப்பல்,
ஏலேலோ!

( 2 )

தண்ணிசுனை தனிலேகிக் குடங்கள்
தான்நெறையக் கொண்டு வந்து
மணைப்பலகையாற் செய்த கப்பல்
மடிபுடைவைதனைக் கேளாய்.
வெள்ளத்தை வாங்கிநீ பள்ளத்தில் வாரு;
வெட்டியா ணைப்புடிச்சுக் கட்டியும் தள்ளு;

பள்ளத்தில் வெள்ளமது துள்ளியே போகுது;
பறியடா, தறியடா, மிறியடா, வெறியா!
பிள்ளைவெள் ளாடதே பிசினிபோல் ஆக்கு;
பெருச்சாளி சண்டைக்கு நெரிச்சுக்கொண்டு வருவான்;
கள்ளைக் குடிச்சுநீ துள்ளிவீ ழாதே;
கஞ்சிமிஞ் சித்தென்று துள்ளாதே படுவா;
தெள்ளிப்போட உள்வாயில் திருப்படா மண்ணை;
சேறுபோ லாக்காதே; பாலுபோ லாக்கு;
வள்ளலை நெனச்சுக்கொள், உள்ளபடி யாக;
மணியாச மாச்சு. ஏலேலோ ஐலலோ! (வேலனே)

( 3 )

மணியாசம் ஆனபின்பு
கால்நான்கு மாநாக்குச் செப்ப னிட்டுத்
தணிகைமலை முருகன் தாளைத் துதித்துத்
தெய்வானை வள்ளியின் பாதங்கள் போற்றித்
தறிநாக்கு நட்டதில் படைமரம் போட்டு...

* * *

சரியான படைச்சாய்ப்பில் சுண்டுவிரல் வச்சுச்
செங்கல் நாக்குக்கு நங்கூரம் பாய்ச்சு;
மரமாக இருக்குமுன்னு எதிராக நட்டு
வழுகாமல் விட்டம் சரியாகக் கட்டு.
* குறுக்கோலை கொண்டு ஓசத்தியே பாரு;

சிறுசாக விழுதுகொண்டு நடுமையம் கட்டு;
திட்டுமட்டு மாகக் கெட்டியாக் கட்டு;
இறுக்கிமணல் சலம்வார்த்துக் கத்திரிப்புணி பாரு;
எங்குமே செவ்வனுக் கண்டுநீ பாரு;
ஏலேலோ மயில் வேலோனே!

---

(பி-ம்.) *குருத்தோலை

( 4 )

பார்த்தபின்பு கொஞ்சம் மண்ணை எடுத்துப்
பாவைக் கொடுத்து நூலைச் சுருட்டி
நேர்த்திய தாக முருகன் திரு வடியை
நினைவினி லன்பாய்த் தொழுதே இறைஞ்சிச்
சொந்தக்கப்பல் ஓட்டும்வகை— கப்பல்
துறையறிந்து தமிழ்பாட—

* * *

நேரான கோல்கொண்டு நேராகப் பாய்ச்சு;
வரும்அலா ரெல்லாம் வாரியே போடு;
நனையடா பொய்ந்நூல் இல்லாத படிக்கு;
நல்லபா னையிலிட்டுக் கல்லின்மேல் கவிரு;
நனையடா மூணுநாள் ஆனபிற் பாடு
நேராகக் காஞ்சபின் சீராக இழைச்சுப்
புணையல் பதினெட்டுக் கொண்டோடி வாடா;
போய்ப்பாவு தட்டுநீ ஆவலாய் ஓடு;
மணையடா சாம்பல் எடுத்துக்கொண்டு வாடா;
வரிசுருள் பெரிசுருள் வரிசையாய்ப் பாரு;
எணைய லும் சருகளை இப்பால்வரும் பாரு;
எமனிட்டு ஒருகையும் நமனையும் பாரு;
திரியான கருதலையும் ஒட்டுக்கும் தட்டு;
உறுத்தடா முளைபுடுங்கித் தெரியவே வையடா;
உருட்டடா, பாவுதனைச் சுருட்டிநனைத் தாடா;
ஏலேலோ—மயில்—வேலோனே!

( 5 )

நனைச்சுவந்த பாவு தன்னை மைக்கா
நாள்தன்னி லேநீ கொண்டு வந்து
கனைக்காத குதிரை தன்னைப் புடிச்சுக்
கால்ப ரப்பியே மேல்ஆள் பூட்டி,

முடுக்கிக்கட்டிப் பாவுதனைக் குதிரைமேல் ஏற்று;
புணைதலாக் கட்டிபேர்த்து முளையடித் தேவிடு;
எடுத்துப்போட் டுப்பையப் பசைபோட்டு உருவு;
ரெண்டுதர மும்கஞ்சி எதிர்நின்று வைபி;
சடுதாப்பில் இருபதுபில் எடுத்துப்பின் போட
அப்புறம் அலகுபிடி; அறுத்நிழையைக் கட்டு;
காத்தடா தம்பி நீ பார்த்துக் கடுகக்
குடுத்துப்பிடு; எண்ணெய்ப்பதம் ஆகியே வருகுது;
சடுத்துமுறை ரெண்டெட்டுச் சாணிக்குறி போடு;
தடியடா புள்ளையார் வச்சுருட்ட வேணும்;
தாழ்ந்துகுறி தோய்ந்துபாவு தோய்ந்துவந் ததுவே;
ஏலேலோ - மயில் வேலோனே!

( 6 )

தோய்ந்து வந்த பாவு தன்னைச்
கோளச்சி லிட்டுக் குழைச்சுப் பாய்ச்சி
ஆய்ந்துகட்டி முடிஞ்சு கட்டின பின்பு
அலகுமடு நிருவிக் கட்டிச்
சிம்பு விழுதுபாவை எடுத்துக்கொட் டிக்கோ;
சேரத்தள்ள டாவிழுதை; தூரவே போகுது;
கம்பிகெட்டுப் போகும்; மொண்டுதள் ளாதே;
காலிடுக் கால்தள்ளி அப்புறம் தள்ளு;
தம்பி விழுதுகட்டி ஆச்சாடா சுருக்கா?
அதுதான் எடுத்துக்கொண்டு தறிமீது போடு;
சிம்புதத் திக்கயிறு அஞ்சையும் பாரு;
சிர்நிருத்திச் சிம்புவை மேற்சிராக் கட்டு;
பம்பா விரிச்சுக்கட்டிப் பாய்சுருட்டுத் தூக்கி
பரிகண்ணைக் கோல்கொண்டு இருதலையும் கூட்டிச்
சம்பங்கிக் கயிறுகொண்டு கம்பந்தைச் சுத்தித்
தனிமரம் கொம்பிலேறி வரிமுனையில் கட்டு;
செம்பூருக் கிழ்த்தத்திக் கண்ணக்கோல் பாய்ச்சு;
வந்தசிம் மாசனம் அமர்ந்ததே கப்பல்;
ஏலேலோ — மயில் — வேலோனே!

( 7 )

வந்தபின்பு முருகேசன் திருவடியை
நினைவில் வச்சு அன்பாய்த் தொழுதி றைஞ்சிச்
சொந்தக் கப்பல் ஓட்டும்வகை— கப்பல்
துறையறிந்து தமிழ்பாட......
வாரான கோல்கொண்டு நேராகப் பாய்ச்சு;
வரும்அலா ரெல்லாம் வாரியே போடு;
மண்டை கடையாணி கொண்டையும் கட்டி,
தார்தனை எடுத்து நாடாவில் தாக்கித்
தலைதனைப் புடிச்சுத் துடைப்பத்தின் கீழ்வாங்கி
ஏறடா பூட்டை, இறுத்தடா மிதியை,
இந்தண்டை அந்தண்டை வந்ததா பாரு;
சிரசிலே சீரளந்து திட்டமாய்க் கட்டு.
*திட்டுமட்டுமாகக் கெட்டியாக் கட்டு
பிடியடா விசைகுத்திச் சதமுதல் குறியை
ஏலேலோ – மயில் வேலோனே!

( 8 )

முதலாம் குறிக்குப் பத்துவெடி போட்டு
முடுக்கிவந்து அச்சில் முகர வந்து
சதமான ரெண்டாம் குறிக்குக் கப்பல்
தானடையும் வகைதனைச் (சொல்லுவேன்)
கேளாய்.

* * *

வரிக்கயிறு விட்டொரு பீரங்கி போடு;
பத்துப்பீ ரங்கிஒரு டபீரென்று போடு;
பார்த்துப்பிடு அப்பாலே பத்தாம் குறிக்கு;
எழுபது வெடிபோட்டு ஏகமாய்ச் சுருட்டு;
குருபாதம் நம்பிநீ தறிவிட்டு இறங்கு;
ஏலேலோ — மயில் வேலோனே!

( 9 )

குருபாதமாக வே ணுமுன்னு பின்னும்
குடிவாழ வேணுமுன்னு

* (பி-ம்.) திட்டமட்டுமாக.

மறுபாவை ஓடித்தோய்ந்து வந்து
வரிசையுடன் அதுதனைப் பிணைத்து.....

* * *

நெய்திடும் படடை எடுத்துமே கட்டி
நெலியான வர்த்தகாள் துலையைப் புடிச்சுக்
கையினில் கொண்டுபொன் மாநிகளை வச்சுக்
கனமான வெலைபேசிப் பணமதை வாங்கிச்
செய்யும்வே லைக்காரர் கையில் குடுத்துத்
திட்டமாய் நெய்யவே உண்மையைச் சொல்லித்
தையலாள் ராட்டினக் குடிகளுக்,கெல்லாம்
சட்டமாய் அடுக்குநூல் திட்டமாய்ப் பண்ணி
வெய்யவன் சந்திரன் உள்ளநாள் மட்டும
எந்நாளும் வர்த்தகாள் நன்ருக வாழ்க!
பயிரிடும் குடிகளும் தழைத்தோங்கி வாழ்க!
பாரில்மன் னர்களும் செழித்தோங்கி வாழ்க!
வையகத் துய்யர்களாம் செங்குந்தர் வாழ்க!
வாழ்கசிம் மாசனக் கப்ப லும் வாழ்க!
ஏலேலோ— மயில்— வேலோனே!

---

# அறுவடைப் பாட்டு

நேத்தடிச்ச காத்தினிலே நிலேகுலேஞ்சு போனதிங்கே;
நேரான கம்புகொண்டு நிரையளக்க முடியலேயே!
கூடுது குறையுதுன்னு கூச்சலும் போடாதிங்கோ;
கூடினலும் கூடிஅறு; குறைஞ்சாலும் கூடிஅறு,
நிரைநிரையாய் அரிபோடு, நெல்சிந்திப் போகாமல்.
நின்னுநின்னு சொல்லவேண்டாம்; நீயாகச் செய்துவிடு,
தாளேத் தணிச்சுப்புடி; தான்மிஞ்சும் சம்சாரிக்குத்
தாரும் (நெல்லும்) மிஞ்சும்; தார்க்கோலும் கூடமிஞ்சும்;
கதிரறுத்துக் கிறுகிறுத்துக் கண்ரெண்டும் பஞ்சடைஞ்சு
சின்னக்கட்டுக் கட்டச்சொல்லிச் சிந்துருளே கண்ணீரை.
சின்னக்கட்டுக் கட்டிச் சிங்காரக் கட்டுக்கட்டித்
தூக்கிவிடும் கொத்தனுரே, தூரக்களம் போய்ச்சேர.

* * *

டாக்டர்

பால்பால் டாக்டர், பஞ்சுப்பொட்டி டாக்டர்,
குதிரை வாலி டாக்டர், குண்டுசெட்டி டாக்டர்.

[வெற்றிலே]

———

# வலையர் பாட்டு

மாயமெல்லாம் உன் மாயண்டா;
மகிமையெல்லாம் உன்மகிமை;
மாயன் பெருமாளே,
மனத்தில்வாழும் சொக்க நாதா,
சொக்கருடை வாகனம் சக்கரங்கொண் டாடவேணும்;
ஆடலென்ன, பாடலென்ன, அஞ்சலென்ன, உன்புரவி!
அஞ்சனை தேவிபெத்த அனுமானை ஆர்அடிச்சார்?
ஆரும் அடிக்கவில்லை; அநியாயங்கள் செய்யவில்லை;
சுக்கலா தேவிபெத்த சூரியனை ஆரடிச்சார்?
ஆரும் அடிக்கவில்லை; அநியாயங்கள் செய்யவில்லை;
எவரும் அடிக்கவில்லை; ஏதொருவர் செய்யவில்லை;
செய்தார் மனமறியச் சிரும்பெற்றுள் நெஞ்சறிய
நெஞ்சிலுள்ள அஞ்செழுத்தை நினையாளாம்,
நீலியவள்;
நீலி துணிஞ்சாலே நின்னைப்போல் யார்துணிஞ்சார்?
யாரை நினைப்பேன்அம்மா, அளவற்ற சிந்தையிலே?

* * *

அன்னமடா கொஞ்சுறது, அருங்கிளியாள் வாய்திறந்து;
வாயால் புகைஎழும்ப அழுதுகண்ணால் தண்ணிவரத்
தண்ணித்துறைப் பொண்டுகளா; சம்பானோடி வருகிறது;
பண்ணாநாள் மலரெடுக்கப் பகவானைப் பூசைபண்ண,
ரொம்பநாள் மலரெடுக்கச் சூரியனைப் பூசைபண்ண,
மேலாநாளே மேலாநாளே மெல்லியரும் மேலாநாளே;
காலாநாளே காலாநாளே கன்னியரும் காலாநாளே;
கன்னி புளியமரம், கைலாசந்தான் ஆலமரம்;
புன்னை புளியமரம்; பொறவாலே அத்திமரம்,
அத்திஇளந் தோட்டண்டி; ஆலநல்ல பூந்தோட்டண்டி;
முருங்கைஇளந் தோட்டண்டி முள்இல்லாத
பூந்தோட்டண்டி;
முள்ளுமுறிஞ்ச வண்டி, முடித்தஅப்பூ வாடாமலே
தாலி நெருங்காமலே தனபாரங்கள் சோராமலே

தனத்தைத் தொட்டால் உனக்கென்னடி? தையலரே,
குறிசொல்லடி;
மாரைத்தொட்டால் உனக்கென்னடி? மங்கையரே,
குறிசொல்லடி.
மங்கை திரண்டாளாமே, மயிலேரெண்டு நாளையிலே?
சீதை திரண்டாளாமே, சிவன்பிறந்த நாளையிலே?
நாளாகிப் போகுதடி; நடக்கவேணும் தென்மதுரை.
தென்மதுரை போனலங்கே தேசிகனைக் காணலாமே;
வடமதுரை போனேமானல் வளர்த்தவனைக் காணலாமே;
காணக்காணத் தோணுதோடி பாவியுட
மண்கோட்டைதான்?
பாவிஎன்னைக் கெடுத்தாளாமே; பாழும் பொண்ணைக்
கொடுத்தாளாமே!
சிறுக்கிஎன்னைக் கெடுத்தாளாமே; சிறங்குப்பொண்ணைக்
கொடுத்தாளாமே!
பக்கம் வலிக்குதடி, பாரெலும்பு நோகுதடி;
ஈரல் கருகுதடி; இருவானம்போல் குன்னுதடி;
மனம்போலக் காட்டைவெட்டி மலையாளத் தீவை
வெட்டி
மலைக்குமுலை கல்லாலடி. சிறுக்கிமுலை சில்லாலடி;
சில்லுப்போலக் காதுகுத்திச் சிலைதைக்கச் சோடாகுமோ?
பொங்கத்தச்ச இருதனமாக் கொப்புளமா ஆறவில்லை;
எண்ணமெல்லாம் பொய்யாச்சுதே! யமனாலே
மெய்யாச்சுதே!
மாயனடி, பொட்டனடி, மதிமயங்கி மங்கையரே,
மங்கை கழுத்துத்தாலி, தொங்குதம்மா தங்கத்தாலி;
அங்கேவந்தா, இங்கேவந்தா, தாலிநல்லாப் பறிக்கவந்தா;
பங்கயப்பூச் சிமாட்டிதான் கொன்றையம்பூ வாணுண்டி:
ஓராம் படுகளமாம், ஓலைப்பூ மண்டபமாம்;
ரெண்டாம் படுகளமாம், ரத்தினக்கல் மேடையிலே;
மேடைவிட்டுத் தான்இறங்கி மோசம்பண்ணி வாருளாமே;
வாராங்கள்ளு வாரவண்டி, வண்ணத்தூரு நாட்டுக்கள்ளு;
பொன்னுதடி வித்தவலை, பொழுதேறிச் சென்னவலை,

பாட்டுக்கு வித்தவலை, பட்டாணிதான் ராயவலை,
பட்டுமுண்டா செட்டியாரே? பவழம் உண்டா
பாண்டியரே?
பட்டுவந் திறங்குதடி, பவழம்வந்த கப்பலிலே;
முத்துவந் திறங்குதடி, முன்னேவந்த கப்பலிலே;
கப்பல்குறி மாவிடிக்க ஒப்பேனேடி சுட்டுப்போட்டு.

## வலை தோவல்

பொன்னுன வாக்குப் போட்டாரே வாக்கு,
இதுவல்ல வாக்கு? இன்னம்ஒரு வாக்கு;
வாக்கிலே தணிந்து வாங்கடா பெரியாரு;
தோவில் தணிந்து தோவும் பெரியாரு;
தோவி எடுத்தேனே, தோளாசைப் பட்டுவலை.

---

# சுண்ணும்பு குத்தும் பாட்டு

( 1 )

மாவிலிங்கம் ஏலேலமடி ஏலம்
கட்டை வெட்டி
எண்ணிக் கைதான் கோலி வெட்டி
ஏலமுன்னு போட்டு விட்டார்;
ஏலத்தில் கொறஞ்சுதுன்னு
எண்ணிவிட்டார் நார்ட்டன்துரை;
ஏலமுன்னு கூறுங்கடா, ஏழுலாந்தர் இல்லேன்னு.
கம்பங்கொல்லே ஓரத்திலே காட்டுப்புரு மேயவிட்டுக்
கதவை நல்லாத் தெறந்ததனுல்
காட்டுப்புருக் கப்புதையா;
சோளக் கொல்லே ஓரத்திலே
ஜோடிப்புரு மேயவிட்டேன்;
ஜோடிரெண்டும் தெறந்ததனுல்
சொக்குதையா சோளத்தைத்தான்.

( 2 )

மலேமேலே காய்ப்பது சுண்டைக்காய் நப்பறை
மயிரைப் புடிச்சிழுத்தால் சண்டைக்கா நப்பறை
வேலியிலே காய்ப்பது வெண்டைக்காய் நப்பறை
வெள்ளிப் பணத்துக்கு உண்டாக்க நப்பறை.
அரிவாள் கொடுவாளே இரும்பாக்க வல்லவன்;
அம்மிக் குழவியைக் கருங்கல்லாக்க வல்லவன்;
செத்த பொணத்தைச் சவமாக்க வல்லவன்;
சுவரேறிக் குதிச்சால் முடமாக்க வல்லவன்;
நண்டுக்குஞ்சு நத்தைக்குஞ்சு நாகசுரம் ஊதவே,
நாலாயிரம் சிலேப்பேனு மத்தளங்கள் கொட்டவே,
சிறுகெளுத்தி, பெருங்கெளுத்தி திவட்டி புடிக்கவே,
சென்ன குன்னி ராஜா தெருவீதி வாருர்!

---

# வலையர் பாட்டு

மானுடண்ணாீ ஓட்டறது, மயிலாடண்ணாீ கொஞ்சுறது.
கொஞ்சுருளாம் தேவடியாள், கோவிலுக்குத்தான்
போறேனுன்னு;
ஆக்குருளாம் தேவடியாள், அரமனைக்குத்தான்
போறேனுன்னு;
அரமனையாம், பொண்டுகளே; அரிசிவிலைதான்
எப்படியோ?
நூத்துற படியாலேதான் மூணுபடிதான் வாங்கடாரீ;
நம்மளூர்ப் படியாலேதான் நாலுபடி வாங்கடாரீ;
மாங்காய்க்குத்தான் கல்லல்லவா? மார்முலைமேல்
பட்டகல்லு?
பட்டண்டி கமலக்கண்ணி, பையன்கையை
வாளாலேதான்;
வாழையடா உன்கூந்தல், வயிரமது பல்காவி;
ஏழைசாமி நான் உனக்கு......

* * *

பச்சரிசி மொச்சைக் கொட்டை, பகவானைத்தான்
வாகையடா;*
வாகைபடத் துடிக்குதம்மா, வலையில்பட நோகுதம்மா;
நோவ உரையாமலே, நொந்தகண்ணால் பாராமலே,
சாய உரையாமலே, சாஞ்சகண்ணால் பாராமலே,

சாயப் பழவேர்க்காடு, சக்கரையாம் கூனிமேடு;
கூனிமேட்டுப் பொண்களுக்குக் கூலிகுத்த நேரமில்லை;
காளமேட்டுப் பொண்களுக்குக் கம்புநல்ல தரித்தானடி;
தரியேனடி பொரியமிர்தம்......

---

(பா-ம்) *வாரையடா.

*  *  *

கண்ணாளன் வருவானோடி? கண்ணே நீ ஏனழுதாய்?
கடைக்கண்ணால் தண்ணிவரக் [கலங்கியே நீ ஏனழுதாய்?]
பொண்ணே நீ ஏனழுதாய், புறங்கண்ணாலே தண்ணிவர?

*  *  *

வடக்கே மலைகளேறி வாழைஇலைதான் கொண்டுவந்தேன்;
தெற்கே மலைகளேறித் தேக்கிலைதான் கொண்டுவந்தேன்;
தேக்கிலைக்குப் போனமகள் திரும்பிவர நான்கண்டேண்டி;
வாழைஇலைக்குப் போனமகள் மீண்டுவர
நான்கண்டேண்டி;
நான்கண்ட கொம்பிலேதான் மயில்கண்டேண்டி
கானலிலே;
கானலிலே ஏண்டிவந்தே? கவுதாரி மாலைப்பொண்ணு?
வெய்யிலிலே ஏண்டிவந்தோ, வெடமறியா
மாலைப்பொண்ணு?
மாலையிலே என்உயிரு மாளவிதிக்* காரடா நீ?
பொண்ணாலே என்உயிரு, போகவிதிக் காரடா நீ?

*  *  *

போகட்டா தாயேஅம்மா? போய்வரட்டா மாதாவேதான்?
சிந்தத் தலைப்பயணம் சீமானாட்டம் போய்வரட்டா?
நாட்டுக்கப்பல் வருகுதோடி? நம்பினவன்*
அரசாண்டானே;
நம்பாதவன் காடாண்டானே,......
பொறுத்தான் அரசாண்டானே; பொங்கினவன்
காடாண்டானே;
காடைபடும் கண்ணியிலே கட்டிமகள் பட்டாளாமே?
சிட்டுப்படும் கண்ணியிலே செட்டிமகள் பட்டாளடி.

---

(பா-ம்.) *வீதி.
(பா-ம்.) *நம்மாள்.

## வலை எடுத்தல்

பொன்னான வாக்கு, போட்டாரே வாக்கு;
இதுவல்ல வாக்கு, இன்னமொரு வாக்கு;
வாக்கிலேதணிந்து தோவும் பெரியாரு.
தோவிஎடுத்தேனே, தோளாசைப் பட்டுவலை.

---

# கோலாமரப் பாட்டு

## ( 1 )

சித்திரைமாசம், கத்தரி கோடைக்காத்து,
வைகாசிமாசம், கத்தரி கோடைக்காத்து,
முன்ஏழு பின்னேழு பேர்கட்டும் காவலாளி;

* * *

நாலொரு மக்களும் கிழக்கு முதத்தில்போய்க்
கொள்ள வேணும்;
கட்டுமரப் பட்டறையைப் போட்டு
மரத்துக்கார்ன் வீட்டண்டை வரவேணும் காவலாளி;
அப்படி நாலொரு மக்களும் ரெண்டுரூ பாய்குடுத்தால்
வெள்ளைப்பொட்டிக் கள்ளுக்கு மாத்துக்கள்ள
வேணும்;
அப்படிஇருக்கட்டும்; கிழக்கு முகத்தில்வந்து
பூசை நடத்தினேம் காவலாளி,
பூசை நடத்திப்போட்டு அவங்கவங்க வீட்டுக்குப்
போய்த் தலைமுழுகப் போனுங்க காவலாளி;
நமக்கேத்த வெள்ளந்தான் நல்லவெள்ளம் கண்ணா!

* * *

முன்னச்சோ கொள்ளை கொண்டபருவை;
நம்மச்சோ நாலாம் பருவை;
நாரால்அளந்து நல்லருண்டி ஆண்டு
நூலால்அளந்து நூத்திலப் பேராண்டு,
பேரால்பெருத்துப் பெரிய மயிலாண்டு;
ஆண்டவரே வாரும்; எஞ்சாமி வாரும்;
மலைவெள்ளம் வந்தது; மதியைக் குலைக்குது;
தலைவெள்ளம் வந்தது; தலையை உடைக்குது;
தரையிலே விழுந்து தானு நகர்ந்து
இடையிலே விழுந்து இடப்புறம் ஓடி,

ஓடி வராதவலே, ஓஞ்சு வராதவலே,
ஆடி வராதவலே, அழிந்து வராதவலே,
தாடிக்கா ரன்வலே, தலேப்பாக்கா ரன்வலே,
மோடிக்கா ரன்வலே, மொள்ள வலேஇழு;
காதத்துவலே, கண்டு வலேஇழு;
தூரத்துவலே, துரத்தி வலேஇழு;
பள்ளத்துவலே, பதுங்கி வலேஇழு.

( 2 )

சித்திரைமாசம் கத்திரி கோடைக் காத்து;
வைகாசிமாசம் கத்திரி கோடைக் காத்து
முன்ஏழு பின்ஏழு போகட்டும் காவலாளி.

* * *

நாலொரு மக்களும் கிழக்கு முகத்தில்பேர்ய்க்
கோள்ளவேணும்;
கட்டுமரப் பட்டறையைப் போட்டு
மரத்துக்காரன் வீட்டண்டை வரவேணும்,
காவலாளி,
அப்படி நாலொரு மக்களும் ரெண்டுருமாய்குடுத்தால்
வெள்ளேப் பொட்டிக் கள்ளுக்கு மாற்றுக்கள்ளு
வேணும்;
அப்படிஇருக்கட்டும்; கிழக்கு முகத்தில் வந்து
பூஜை நடத்திறேம், காவலாளி,
பூஜை நடத்திப்போட்டு அவங்கஅவங்க வீட்டுக்குப்போய்த்
தலேயை முழுகப் போனுங்க, காவலாளி,
அப்படிக் கிழக்குமுகத்தில் வந்துகிட்டு மரத்தை
அணேச்சுக் கொண்டா;
அப்படிக் கட்டுமரத்தைக் கிழக்கு முகத்திலே
திருப்பி வைக்கவேணும்;
திருப்பிவச்ச வத்தைதான் மினுக்கோடிப் போகுது;
அப்படி வத்தைதான் மினுக்கோடிப் போச்சே.

தலைப்பாய்பதி னஞ்சுமுழம் பாய் கடப்பாய்
ஒன்பது முழம் பாய்;
ராத்திரி தூக்கினமரம் காலை ஆறு மணிக்குள்ளே
ஊருபதி தெரியாது போகுதே; காவலாளி;
அப்படிக் காலையிலே எட்டு மணிக்குமேல்
பாய்புடிச்சேன், காவலாளி;
அப்பால் மெத்தையைக் காவலாளி யை நெனைச்சுக்
கங்கையில் விட்டேன்;
கங்கையில் நாலொரு மக்களும் மெத்தையை விட்டுக்
கைகட்டி நிக்கிருங்க, காவலாளி,
அப்படிப் பீலிக்காரன் மேய்ந்துகொண்டு வாராண்டா,
காவலாளி.
அப்படிப் பதினாரும் நம்பர்நூல் நாற்பது இழைக்கயிறு
அஞ்சுபிரி கம்பி, ஆருளு முள்ளு,
அப்படி இறயங்கள் குத்திநல்லாப் போட்டேன்:
அப்படிப் பத்திக் கொண்டுவந்து கிட்டவந்து
சுருக்குப்போடப் போறேன்; தடியைஓட்டப் போறேன்;
அடிஅடி அடிச்சுக் கடயமரத்தில் இழுத்துக்கொண்டு
வச்சேன்;
அப்படிக் காவலாளி வத்தை கிழக்கே
திருப்பங்கள் வச்சான்;
அப்படி மாப்புக்காரக் காவலாளி
காத்தவ ராய சாமி
ரெட்டைப் பட்டறை சீக்கிரமாய்க்
கொண்டு சேக்கணும் காவலாளி;
அப்படி நாலொரு மக்களும் கடய வத்தையில்
வந்துநீர் மாத்திப் பல்லக்கை முகத்தைச் சுத்தினு;
அப்படி நாலொரு மக்களும் ரெண்டுபேர் சேர்ந்து

ஒருபல்லாக் குள்ளே சாப்பாட்டைச் சாப்பிடுறுங்க,
காவலாளி;
நாலொரு மக்களும் சுடுவானேப் புடிச்சு
ஆகாசப் *படிப்பானேப் போட்டா கட்டும்;
அப்படி நீரும்மாத்தி மெத்தை அளிச்சிட்டுக்
கூட்டிக்கொண்டு வாடா காவலாளி;
அப்படித் தொட்டி அணைச்சு அப்படி
மெத்தையைக் கொம்பு வணக்கிக் காவலாளி,
காலேயில் பத்துமணிக்குக்.குரதி கண்டங்கள்
செய்யும்;
பகல்லே ரெண்டு மணிக்குள்ளே பத்தாயிரங் கோலா
வத்தையில் ஏத்திப் போட்டேன்;
அப்படிப் பாயுங்கள் தூக்கிப் போட்டேன்;
நாலு மணிக்குப் பாயுங்கள் போட்டேன்;
அஞ்சு மணிக்கு மலேயைக் கௌப்பினேன்
பன்னெண்டு மணிக்குக் கோடி விட்டேன்;
பாயி புடிச்சேன்; சினிங்க போட்டேன்;
காடிப் பானேச் சோத்தை எடுத்து
நாலொரு மக்களும் தின்னோம்;
அப்படி நாலொரு மக்களும் ஆரு பறிலே
படுத்துக் கொண்டோம்;
பொழுது விடிஞ்சுது; ரெண்டு சிரு
பதினாறு ரூபாய்க்கு வித்தேன்:
எட்டாயிரம் கோலா அறுபது ரூபாய்க்கு வித்தேன்;
அப்படி வித்துப் போட்டுத் தள்ளிட்டுப் பாயுங்கள்
தூக்கிப் போட்டோம்;
அப்படி ஊருக்கு நேரே வந்து பாய்புடிச்சோம்;

(பா-ம்.) *ஆயிடும்படி.

அப்படிப் பாய்புடிச்சுத் தோவிக் கொண்டு வந்து
தட்ட வச்சோம்;
மரத்தங்கள் காவிப் போட்டு
நாலொரு மக்களும் அவாளவாள் வீட்டண்டை போய்
அப்படி மரத்துக்காரன் வீட்டண்டை வந்து
வெள்ளைப் பொட்டிக் கள்ளுக்கு;
அப்படி நாலொரு மக்களும்
கள்ளுக் கடைக்குப் போனாரே;
அப்படிக் கள்ளுங்க சாப்பிட்டுச்
சீக்கிரமாய் வாங்கடா;
அப்படி நாலொரு மக்களும்
கிழக்கு முகத்தில் வாங்க, காவலாளி.
கிழக்கு முகத்தில் வந்து பூசைகள் பண்ணணும்;
அப்படிஅவாள் வீட்டில்போய்ப் படுத்துக்
கொண்டாங்க;
அப்படித் தன்னோட பொண்டாட்டிக்காரி
சாப்பாடு ஆக்கி வச்சாள்;
அப்படிப் புருஷனைப்போய் எழுப்பினாள்;
ரெண்டு தவடைமேல் குடுத்தான்
தன்னோட புருஷன்;
அப்படித் திரும்பவும்போய்க் கூப்பிடப் போகப்
பின்னையும் ஒருஉதை குடுத்தான்;
அப்படித் தன்னோட பொண்டாட்டிக் காரி
இவன்கிட்டே இருக்கிற நேரத்துக் குள்ளே
தாய்தகப் பன்கிட்டே இருந்திடலாம்;
அப்படி ஓசனை பண்ணினாள் பொண்சாதி;
அப்படி ஓசனை பண்ணிப் போட்டு
அடுப்பண்டை முக்காடு போட்டுப் படுத்துக்கொண்டாள்;

அப்படிப் புருஷன் எழுந்து கோப்பையை
எடுத்துக் கழுவிக்கொண்டு
சோத்துங்க போட்டுங்க தின்னுருன்;
அப்படித் தின்னுப் போட்டுப் போயுங்க படுத்துக்
கொண்டான்;
அப்படித் தன்னோடே பொண்சாதிக் காரி எழுந்து
வெளியில்வந்து — ரெண்டு மணியிருக்கும்.
இன்னம் அந்தப் பயல்வுன் எழுந்திருக்கலே?
அப்படி வீட்டண்டை போய்ப் பார்த்தாள்;
போய்ப்பார்த்த காலங்களில் சோத்துச் சட்டியைத்
தெறந்து பார்த்தாள்:
அப்படி எல்லாத்தையும் அவன் தின்னுட்டுக்
கொஞ்சமாய் வச்சிருக்கான்;
அப்படிப் பொண்சாதிக் காரி
சோத்துங்களைப் போட்டுக் கொண்டாள்;
அப்படிப் போட்டுக்கொண்டு அடுப்பண்டை வந்து
தின்னுருள்;
அப்படி மேலே கையைக் கழுவிவிட்டுப் படுத்துக்
கொள்ளுருள்;
அப்படி அப்படி மேலே புருஷன் எழுந்து வந்தான்;
எழுந்துவந்து முகத்தைச் சுத்தி அலம்புகிருன்;
அப்படி மரத்துக்காரன் விட்டண்டை
பங்குப் பணத்துக்குப் போனுன்;
அப்படித் தன்னோடே பொண்டாட்டிக் காரி
பின்னேடே போனுளே;
பங்கு பன்னிரண்டரை ரூபாய் பார்க்கிருன்;
பக்கத்திலே வேலிக்குப் பின்னே இருந்து
பொண்டாட்டிக் காரி உளவாய் இருந்து கேட்கிருள்;

அப்படி வெளியில் வரட்டுமென்று தன்னுடை
    பொண்சாதிக் காரி திரும்பி ஓடியாந்து போயிட்டாள்;
அப்படி-அப்படி மேலே மரத்துக் காரன்
வீட்டண்டை போய்ப் பத்து ரூபாய் பங்கங்குப்
    பார்த்தான்னு சொல்லு;
அப்படி-அப்படி மேலே ரெண்டு ரூபாய்
அப்படித் தன்னுடை பொண்சாதிக் காரி
ஒண்டிப்போய்க் கேட்கப் போனுள்;
அப்படிப் போய்க் கேட்கப் பன்னிரண்டரை ரூபாய்
இன்னு சொல்லிவிட்டான்; மரத்துக் காரன்;
அத்தோட ஒண்டிக்காரன் மரத்துக் காரனிடப்போய்
என், பொண்டாட்டியை மரத்துக்கு
இட்டுண்டு போஎன்றுன்.

— —

# படகு தள்ளும் பாட்டு—2

தள்ளடா, தள்ளடா, படகைத் தண்ணிமேல் தள்ளடா;
கச்சாங் காத்துக் கரைகொண் டடிக்குது;
கப்பல்ல முப்பல்ல மலையிலே பறக்குது;
அச்சு முறிஞ்சது; ஆணி கழண்டது;
நாகூரு வேலையும் தரித்தண்டா வேலையும்
ஓடிய பாய்வலித்து—அப்பனே—ஓடிய பாய்வலித்து
(தள்ளடா)

பச்சைப் பவளமடா, பாரெங்கும் தோணுதடா;
பாலன் பிறந்தானோ? [பால்குடிக்க வந்தானோ?]
தம்பி பிறந்தானோ? தவனம்வந்த நாளையிலே?
நாளாகிப் போகுது; நடக்கவேணும் தென்மதுரை;
தென்மதுரை போனோமானால் தேசிகனைக் காணலாமா?
வடமதுரை போனோமானால் வளர்த்தவனைக் காணலாமா?
காணலாமா முன்எல்லாம் கச்சலா ஏடுகடட?
பார்க்கலாமா முன்னெல்லாம் பால்பானை ஏடுகட்ட?
ஏடு தவருது; எழுத்தாணி கீருது;
பண்ணினவன் பாவமது பாம்பாய்ப் புரளுருனே;
பாம்பேரு மண்டபமோ? பத்துநிலாக் கோபுரமோ?
கோபுரத்தைக் கண்டவங்க கோடிதவம் செய்தவங்க;
சிதம்பரத்தைக் கண்டவங்க சேனைதவம் செய்தவங்க.
சேனை பெருத்தவண்டா, சினம்பெருத்த ராவணங்க;
கும்பு பெருத்தவண்டா, குணங்கெட்ட ராவணங்க;
ராவணன் சேனைஎல்லாம் ராவாப் பயணமிடப்
பாட்டாளி சேனையெல்லாம் பகலாய்ப் பயணமிடப்
பயணம், பயணமடி; பத்தாவுந் தான்பயணம்;
சோங்குப் பயணமடி; சொன்னகப்பல் தான்பயணம்;

தாஞடித் தள்ளாடித் தாயே, நடந்துவாடி;
நடந்தால் நடைதோணுமோ? நாணயமாய்
ஊர்தோணுமோ?
மாண்டவடம் போனுலும் மதுரை வழிதோணுமோ?
மதுரைச்சொக்க நாதன்துணே; வள்ளிமண வாளன்துணே;
வள்ளிக்கெல்லாம் வலதுக்கெல்லாம் வலேயில்படும்
மீனுக்கெல்லாம்
மீனு மௌந்தவலே, மீனுட்சியம்மன்வலே,
கடலா மௌந்தவலே, காமாட்சியம்மன்வலே;
அம்மணி, என்தாயே, ஆதிபரா சக்தியே,
திக்கெல்லாம் கண்படைச்ச தேவிபரஞ் சோதியே,
தேவி கடலோடத் தேசமெல்லாம் கொண்டோட
மாரி கடலோட மாமாங்கம் கொண்டோடக்
கொண்டவனேக் கண்டாலும் குலேயை நடுக்குதே;
வளர்த்தவனேக் கண்டாலும் அடிவயிறு நோவுதே;
நோவ உரையாமலே நொந்தகண்ணுல் பாராமலே,
சாய உரையாமலே சாஞ்சகண்ணுல் பாராமலே,
பாருக்கு ஓடித்தாஞ பருந்துலப்பை பேத்தெறக்கி
ஏழையென்று பாராமலே எடுத்துதே வாலிபங்க;
வாலிருந்தால் தேடலாமா? வாதுசொன்ஞ அழிக்கலாமா?
அழுதகண்ணு சிந்தலேயா? அவள்போனுளாம்
மூலேயிலே;
மூலேயிலே கள்ளேவச்சு மொந்தைக்கள்ளே வார்ப்பாளோ?
சாலேயிலே கள்ளேவச்சுச் சாத்தமுதை வார்ப்பாளோ?
சாத்தங்காடாம் சடையன்குப்பம் தயவுண்டானல்
வரச்சொல்லுங்க.
ஈச்சங்கடையாம் இருண்டசோலே, இருக்குருன்னு
வரச்சொல்லுங்க;
இருந்தால் இருக்குமிடம், இருள்போனல் தங்குமிடம்;

போனல் இருக்குமிடம், பொழுதுபோனல் தங்குமிடம்;
தங்குவேனே இங்கே நல்லா, தரிப்பாளோ தாயார்மனம்?
தாயறிவாள் பிள்ளைகுணம், தவமிருந்து பால்தருவாள்;
பாலன் பிறந்தாண்டி, பதினெட்டாந் தேதிக்குள்ளே,
தம்பி பிறந்தாண்டி, தரணி இந்த நாளையிலே;
நாளாகிப் போகுது; நடக்கவேணும் தென்மதுரை;
தென்னந் தெருவிலே தேரோடும் வீதியிலே
மன்னன் மகளாலே மகராசன் வீடுதேடி,
வீடுமல்ல, சோடுமல்ல, எதிராளி ஒருவனல்ல,
பாடுமல்ல, பறப்புமல்ல, பகையாளி ஒருவனல்ல;
ஒருவர் மயிர்புடிக்கப் பன்னெண்டுபேர் வேதம்சொல்ல,
வேதப் பொருளே அம்மா, விளையாடும் பார்வதியே,
பச்சைப் பொருளேயம்மா உன்–பாவனையை ஆரறிவார்?
ஆரை நினைப்பேனம்மா, அளவற்ற சிந்தையிலே?
எவரை நினைப்பேனம்மா, எண்ணமிட்ட சிந்தையிலே?
எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிமனம் குன்றேனே!
கல்லோடி உன்மனசு? கரையலையோ எள்ளளவும்?
இரும்போடி உன்மனசு? இரங்கலையோ எள்ளளவும்?
ஆராரு காவலோ, ஆதிசக்தி உன்காவல்?
எவரெவர் காவலோ ஏழுசக்தி உன்காவல்?
சக்தி உமையவளே, சமயம் பதினாயிரம்;
சரணம் சரணமம்மா, சார்ச்சாங்கம் நான்சரணம்;
நான்தானே பொண்பொறந்தேன்? நாட்டிலேயும்
பொண் இலையோ?
ஒருத்திதானே பொண்பொறந்தேன்? ஊரிலேயும்
பொண் இலையோ?
பொண்ணாகப் பொறந்ததொல்லை போதுமடி எந்தனுக்கு;
எந்தஊரு? எந்தத்தேசம்? எங்கிருந்து இங்குவந்தாள்?

ஆணைப் பிறந்ததில்லே; அரைஞாணும் கட்டலேயோ ?
கட்டிலுண்டு சாவலுண்டு —உனக்குக் —கால்புடிக்கத்
தாதியுண்டு;
உடுக்கத் துகிலுமுண்டு; செலவழிக்க ரொக்கமுண்டு;
என்னவென்று சொல்லுவனே? எழுதுவனே ஓலையிலே?
ஓலே கருகமணி, ஒருகழுத்துச் சங்குமணி
பாலாக் கருகமணி, பசங்களுக்கே சங்குமணி;
சங்கு முழங்கிவரச் சங்கரனர் கோவிலிலே;
கோவிலும் தூரமம்மா; குழந்தைமனம் காதமம்மா;
மாளிகையும் தூரமம்மா; மைந்தன்முகம் காதமம்மா;
காகம் பறவாது: கருங்குருவி நாடாது;
சிட்டுப் பறவாது; செங்குருமான் நாடாது;
நாடுதங்கி வாமகனே, நல்லசேதி சொல்லட்டுமா?
ஊருதங்கி வாமகனே, உத்தசேதி சொல்லட்டுமா?
ஊருக் கதிகாரி உள்ளூரு வெள்ளாளச்சி:
நாட்டுக் கதிகாரி நம்மளூரு வெள்ளாளச்சி;
வெள்ளாளப் பொண்டுகளா, விளையாடும் பார்வதியே!

———

# வலைப் பாட்டு—1

[ஏந்த வலை தோவும்போது பாடும் பாட்டு.]

வாடா, வலேசான், வடவண்டை வலை
தென்னண்டைக் கொண்டு கூண்டு பறிச்சுப்
பட்டாளம் கட்டி வாரிப் பொளந்து
வயிற்றிலே போட்டு ..
வயிறெல்லாம் காயுது; வர்ணமூடி சோருது;
நிலவெல்லாம் போகுது; நிலமுகம் வாடுது;
நிலட்டராண்டி நீர்மாத்திக் கொண்டு,
ஆண்டவரே வாரும்; எஞ்சாமி வாரும்;
எஞ்சாமி வாரும்; என் துரையே வாரும்;
வாரும், வலைவராதா? வடக்கே வலைவராதா?
ஏறுவலை ஏருதா? என்றன்கலி தீராதா?
வாடப்பாட்டன் கண்ணுளா, வயல்பாட்டன் கண்ணுள்ளா,
கோடப்பாட்டன் கண்ணுளா, கொண்டப்பாட்டன்
கண்ணுளா,
ஒருகாத்து, ஒருவெள்ளம், ஒத்தவெள்ளம் கண்ணுளா!

———

# வலைப் பாட்டு—2

[வலை இளப்பும்போது பாடுவது]

ஏலெல்ல ஏலெ, ஏலச்சாமி ஏலெ,
ஏலமல்லி ஏலெ, பில்லஞ்சடை ஏலெ,
பேந்தப் பாட ஏலெ;

* * *

பறங்கிபடப் பந்தமுன்னு
துலுக்காணம் ரவணத்தலை
மலக்கருடை மண்பறந்து
துலுக்கருடை தூள்பறந்து
போகுதடா ஏலேலம்
கல்லாலே கோட்டையடா,
கரையுதடா கல்கோட்டை;
இரும்பாலே கோட்டையடா,
இடியுதடா கல்கோட்டை,
இடிஇடிக்க மழைபொழிய
இருண்டவெள்ளம் திரண்டோட
வெள்ளத்திலே பொண்களெல்லாம்
நீர்குளிக்க நீராடி
நீராடிப் பொண்களெல்லாம்
நீலவர்ணப் பட்டுடுத்து;
பட்டுமஞ்ச மரங்களெல்லாம்;
பாக்குமரம் காவலிலே
முத்துமஞ்ச மரங்களெல்லாம்
[முருங்கை மரம் காவலிலே.]

———

# எதிர்ப் பாட்டு

[வலை போடுவதற்கு முன் போகும் போது பாடுவது.]

கப்பக்கால் மேலே லேலேலே*
கரையாத்தி மார்மேலே லேலேலே
சோங்குக் கரைமேலே லேலேலே
சோனகத்தி மார்மேலே லேலேலே
சோனகர்க்கும் துலுக்கருக்கும் லேலேலே
சொந்தமுள்ள அல்லாவுக்கும் லேலேலே
அல்லாவை நோக்கித்தான, லேலேலே
அலைகடலில் பாய்வலித்தோம்; லேலேலே?
பொல்லாத அல்லாவை லேலேலே
புடிச்சாண்டி பேப்பாங்கு லேலேலே,
பேயா போடா, பித்தா போடா, லேலேலே
பிணங்கள் தின்னும் ஆண்டிபோடா, லேலேலே
ஆண்டி பரதேசி லேலேலே
ஆரோஒரு சந்யாசி லேலேலே
தோண்டி வயிறுபடைச்ச லேலேலே
தோராம விற்குணரே லேலேலே.

---

(பா-ம்.) * ஏலேலோ என்று இருக்க வேண்டும்.

பேழை வயிற்றோனே, லேலேலே
　　பெருச்சாளி வாகனரே, லேலேலே
ஐயா கணபதியே, லேலேலே
　　ஐங்கரப் புள்ளையாரே, லேலேலே
ஐயாநான் உன்பாதம், லேலேலே
　　அடியேனுந் தான்சரணம், லேலேலே
சரணம் சரணம்ஐயா, லேலேலே
　　சாச்சாங்கம் நான்சரணம் லேலேலே
ஆடை கொடிமேலே லேலேலே
　　ஆபரணம் பொட்டியிலே லேலேலே
சேலை கொடிமேலே லேலேலே
　　செலவுதனம்* பொட்டியிலே லேலேலே
பொட்டிவரும், புலவுவரும் லேலேலே
　　பொன்னுந்துற தாலிவரும் லேலேலே
தாலி தவறவச்சு லேலேலே
　　தலைவாரும் சோதிமின்ன லேலேலே;

சோதி மணிவிளக்கு, சொன்னாலும் பொன்விளக்கு, ,,
வரிசை மணிவிளக்கு, வந்தாலும் பொன்விளக்கு, ,,
பொன்னை அளந்தவண்டி, பொருள்அளந்த
புண்ணியண்டி, ,,
மண்ணை அளந்தவண்டி, மனைஅளந்த மாயவண்டி, ,,

---

(பா-ம்.) * சிலதானம்.

மாயா, வாடா, வேங்கடேசா, மலையளந்த மாயவனே, ,,
சொக்கருடன் வாதாடிச் சுக்காங்கொண் டாடவேணும், ,,
பரமருடன் வாதாடிப் பாற்பசுவைக் காவுகொண்ட ,,
காவு வருகுதுன்னு காடேறிப் பாருமின்னு, ,,
பாறை மலையாள்ம், பதினெட்டாம் வங்காளம் ,,
கொச்சி மலையாளம், கொறவருட வங்காளம் ,,
வங்காளம் எங்கேயம்மா? வடுகருட சீமைஎங்கே? ,,
சீமைக் கடுதாசி, சித்திரத்தால் குண்டுமணி ,,
மதுரைக் கடுதாசி, மாணிக்கத்தால் குண்டுமணி ,,
குண்டு கௌம்பிவரக் கூட்டப்படை சாய்ந்துவர ,,
வானம் கவிந்துவர மழைக்கால் புரண்டுவர ,,
மறக்கா ருருண்டபந்தயம், மன்னவன் தோத்தபந்தயம் ,,
செடிகா ருருண்டபந்தயம், சீமானர் தோத்தபந்தயம் ,,
சீமைகண்டேன், செடியைக்கண்டேன் சித்தளப்பன் மேடைகண்டேன் ,,
நாடுகண்டேன், நகரம் கண்டேன், நல்லகாலம் பெய்யக்கண்டேன் ,,
நல்லதடா வேடர்களே, நலமாச்சடா என்றனக்கு, ,,
ஆகட்டுண்டா வேடர்களே, அலட்டாச்சே என்றனக்கு ,,
எந்தஊரு? எந்தநாடு? எங்கேருந்து இங்கே வந்தாய்? ,,
ஆர்குடியை நீகெடுக்க ஆண்டிவேச மாகவந்தாய்? ,,
ஆண்டி மவனேவாடா, அக்ராரப் பசுங்கிளியே! ,,

———

# வண்ணான் பாட்டு

ஆனைக் கல்லு ஓரத்திலே
ஆள்மட்டுந் தண்ணியிலே

நீலக் கல்லுப் பாறை மேலே
நின்னடிக்கும் சின்ன வண்ணான்

நான்போக நேரம் ஆச்சு;
என் துணியைத் தாரு மோடா;

போனாலும் போவே புள்ளே;
போவதற்கு முன்னே கொஞ்சம்

வெள்ளாவி அடுப்புக்கு
விறகெடுத்துப் போடுபுள்ளே.

— — —

